மலர் 15 இதழ் 321

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 1897

Phone No. 76190: 76199

"நவமணி"

சந்தா விகிதம்

1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. [illegible].00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45.00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ தினசரி

சென்னை 4-8-75 திங்கள்

வெளியூர் 5-8-75 செவ்வாய்

உணவு உற்பத்தி:
திட்ட கமிஷன்
உறுப்பினர் நம்பிக்கை

4-ம் பக்கம்

# கம்யூனிஸ்டு மகஜர்
## மத்தியமந்திரியிடம் தி. மு. க. அரசு மீது தங்கமணி புகார்

**சென்னை, ஆக. 4— மத்திய உள்துறை மந்திரி பிரும்மானந்த ரெட்டியிடம் நேற்று கம்யூனிஸ்டு கட்சியின் தமிழ்நாடு கிளை சார்பாக ஒரு மகஜர் தாக்கல் செய்யப்பட்டது.**

தமிழ்நாடு சட்டசபை கம்யூனிஸ்டு கட்சித் தலைவர் கே. டி. கே தங்கமணி நேற்று சென்னையில் மத்திய மந்திரி பிரும்மானந்த ரெட்டியைச் சந்தித்து இந்த மகஜரைக் கொடுத்தார்.

கம்யூனிஸ்டு கட்சி எம். பி. யான எஸ். ஏ. முருகானந்தமும் இந்த மகஜரில் கையெழுத்து போட்டிருந்தார்.

மகஜரில் கூறப்பட்டுள்ள முக்கிய விஷயங்கள் பின் வருமாறு:—

(1) அவசர நெருக்கடி நிலை பிரகடனம் குறித்து விவாதிக்க தமிழ்நாடு சட்டசபைக் கூட்டத்தை கூட்ட வேண்டும் என்று கோரி சபாநாயகருக்கு கே. டி. கே. தங்கமணி எம். எல். ஏ. எழுதியிருந்த கடிதத்திற்கு இன்னும் பதில் வரவில்லை.

38-வது அரசியல் திருத்த மசோதாவை அங்கீகரிக்க பல மாநில சட்டசபைகள் கூட்டப்பட்ட போதிலும் தமிழ்நாடு சட்டசபைக் கூட்டம் இன்னும் நடத்தப்படவில்லை.

(2) மத்திய அரசு அறிவித்த 20 அம்ச பொருளாதார திட்டத்தில் 15 அம்சங்களை நிறைவேற்றி விட்டதாக தமிழக அரசு தெரிவித்துள்ளது. ஆனால் நில உச்சவரம்பு சட்டம் கூட இன்னும் 9-வது ஷெட்யூலில் சேர்க்கப்படவில்லை அந்த சட்டம் மறுபரிசீலனை செய்யப்பட வேண்டும்.

(3) குறைந்த வருமானக்காரர்களுக்கு போதிய நிவாரணம் அளிக்கப்படவில்லை. அத்தியாவசியப் பண்டங்களின் விலைகள் எங்கு இருந்தனவோ அங்குதான் இன்னமும் உள்ளன. அரிசி விலை கிலோவுக்கு 10 காசு மட்டுமே குறைக்கப்பட்டுள்ளது. கிராமங்களில் சுகாதார வினியோகம் ஒழுங்காக நடைபெறவில்லை.

(4) பெரு நிலப்பிரபுக்களிடமும், வணிகர்களும் பதுக்கி வைத்துள்ள கையிருப்புகளை வெளிக்கொணர போதிய முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. அத்தியாவசியப் பொருள்களின் உற்பத்தி. கொள்முதல் வினியோகம் ஆகியவற்றிலும் குறைபாடுகள் நீடிக்கின்றன.

(5) விவசாய தொழிலாளர்களின் ஊதிய மாற்றத்திற்கு எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

(6) ராமநாதபுரம், திருநெல்வேலி, வட ஆற்காடு மாவட்டங்களில் விவசாயிகளுக்கு கடன் வழங்க அடகு கடைக்காரர்கள் மறுக்கிறார்கள் இதைக் கண்டு மாநில அரசு மௌனம் சாதிக்கிறது.

(7) தமிழ்நாட்டில் எதிர்க் கட்சிக்காரர்கள் மீது 'மிசா' சட்டம் தவறான முறையில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

இவ்வாறு மகஜரில் கூறப்பட்டுள்ளது.

## அதிகாரிகள் குறுக்கே நின்றால் தண்டனை

ராஞ்சி, ஆக. 4—பிரதமரின் 20 அம்ச பொருளாதார திட்டத்தை செயல்படுத்துவதில் குறுக்கே அரசாங்க அதிகாரிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும் என்று பீகார் முதலமைச்சர் எச்சரித்துள்ளார்.

ராஞ்சி மாவட்டத்தில் 158 மீட்டர் நீளமுள்ள ஒரு ரெயில்வே பாலத்தை முதலமைச்சர் ஜகன்னாத மிஸ்ரா திறந்து வைத்தபோது மேற்கண்ட எச்சரிக்கைவிடுத்தார்.

மலைவாசிகள் வசிக்கும் பிரதேசத்தில் பாசன வசதிகளைப் பெருக்க விசேஷ நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று அப்போது அவர் தெரிவித்தார்.

ஏற்கெனவே ஏழைகளைக் கடன் தொல்லையிலிருந்து விடுவிக்க நடவடிக்கை எடுத்திருப்பதாகவும் இந்த ஆண்டுக்குள் மலைவாசிகளுக்கு அவர்களின் நிலம் மீட்டுக் கொடுக்கப்படும் என்றும் தெரிவித்தார்.

## பீடி ஊழியர் ஊதியம் உயர்வு

சென்னை, ஆக. 4—பீடி சுருட்டுத் தொழிலாளர்களின் குறைந்தபட்ச ஊதிய விகிதங்கள் உயர்த்தப்பட்டுள்ளன.

தமிழக அரசாங்கம் வெளியிட்டுள்ள கெஜட் ஒன்றில் இந்த ஊதிய உயர்வு அறிவிக்கப்பட்டுள்ளது.

ஆயிரம் பீடி சுற்றுவதற்கு 25 காசு வீதமும் ஆயிரம் சுருட்டு சுற்றுவதற்கு 50 காசு வீதமும் ஊதியம் உயர்த்தப்படுகிறது.

பீடி, சுருட்டுத் தொழிலாளர்கள் குறைந்தபட்ச கூலி உயர்வு பற்றி பீடி, சுருட்டுத் தொழிலாளர் சம்மேளன பொதுச் செயலாளர் ஏ. எம். கோபு கருத்து தெரிவித்துள்ளார்.

இந்தக் கூலி உயர்வை தொழிலாளர்கள் ஏற்கனவே பெற்றுவருவதாக அவர் தெரிவித்துள்ளார். அவர் மேலும் கூறுகையில் பீடி, சுருட்டுத் தொழிலாளர்கள் குறைந்த பட்ச கூலி 8 ரூபாய் என்று முடிவு எடுக்கும்படி கோரி வருகிறார்கள். ஆனால் அரசாங்கம் 25 பைசாவைத்தான் அறிவித்து இருக்கிறது.

அண்டை மாநிலங்களான ஆந்திரத்திலும், கர்நாடகத்திலும் குறைந்த பட்ச கூலி அதிகமாக இருப்பதாகவும் கோபு தெரிவித்துள்ளார்.



மந்திரி என்.வி.என். உடல் மீது மலர் வளையம் வைத்து கவர்னர் கே. கே. ஷா இறுதி அஞ்சலி செலுத்தினார். அவருக்கு அருகே முதலமைச்சர் கருணாநிதி, மத்திய மந்திரி பிரும்மானந்த ரெட்டி, தமிழ்நாடு தொழிலாளர் நல அமைச்சர் ராசாராம் முதலானோர் மவுனமாக நின்றனர்.

பிரதம நீதிபதி காரில்

வெடி குண்டு வீச்சு எதிரொலி

## ஆனந்த மார்க்க ஆசாமிகள் 3 பேர் கைது

**புதுடெல்லி, ஆக 4—டெல்லியில் சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதியின் காரில் இரு வெடி குண்டுகளை வீசியதாக, "வெறி பிடித்த" ஆனந்த மார்க்க ஆசாமிகள் 3 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர் என்று மக்கள் சபையில் மந்திரி ஓம் மேத்தா இன்று தெரிவித்தார்.**

சந்தோஷானந்த், சுதேவானந்த் விக்ரம் ஆகிய மூவரும் இவ்விதம் கைதுசெய்யப்பட்டுள்ளனர். இவர்களில் சந்தோஷானந்த் சுதேவானந்த் ஆகிய இருவரும் தான் காரில ஆளுக்கு ஒரு வெடிகுண்டை வீசியவர்கள். மூன்றாவது நபரான விக்ரம் அப்போது அருகில் இருந்தார்.

இந்த 3 பேர் மட்டுமின்றி மற்றும் சிலரும் சம்பந்தப்பட்டிருந்ததற்கான சாட்சிகள் சிக்கியுள்ளன. விரைவில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்படும் என்று உள்துறை ராஜாங்க மந்திரியான ஓம்மேத்தா தெரிவித்தார்

சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதி ஏ. என். ரேயை கொலை செய்வதற்கான முயற்சி கடந்த மார்ச் மாதம் 20-ந் தேதி நடந்தது.

### காருக்குள் குண்டு வீச்சு

சுப்ரீம் கோர்ட்டிலிருந்து அவர் தனது காரில் வீடு திரும்பிக் கொண்டிருந்தார். ஒரு ரோடு சந்திப்பில் 'பச்சை' சிக்னல் வருவதற்காக டிரைவர் காரை நிறுத்தினார். அப்போதுதான் பிரதம நீதிபதியின் காருக்குள் இருகை வெடி குண்டுகள் வீசப்பட்டன. அந்த வெடிகுண்டுகள் நல்லவேளையாக வெடிக்கவில்லை. வெடிகுண்டுகளை வீசியவர்கள் தப்பி ஓடினர்.

முதலில் டெல்லி போலீசார் இது பற்றிய புலன் விசாரணையை நடத்தினர். பின்னர் சி. பி. ஐ. இப்புலன் விசாரணையை மேற்கொண்டது.

இந்த வெடிகுண்டு வீச்சு சம்பந்தமாக சுமார் 4 மாதகால தீவிர புலன் விசாரணைக்குப் பிறகு இப்போது ஆனந்தமார்க்க இயக்கத்தைச் சேர்ந்த சந்தோஷானந்த், சுதேவானந்த், விக்ரம் ஆகிய 3 பேரும் கைது செய்யப்பட்டுள்ளனர் என்று மந்திரி ஓம்மேத்தா இன்று தெரிவித்தார்.

இந்த மூவர் மட்டுமல்லாமல் மற்றும் சிலர் இக்கொலை முயற்சியில் சம்பந்தப்பட்டிருந்தனர் என்பதை ஊர்ஜிதப்படுத்தும் வகையில் வாய்மூல சாட்சியங்கள் மட்டுமன்றி. எழுத்துபூர்வ சாட்சியங்களும் கிடைத்துள்ளன. விரைவில் குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்படும் என்றார் மந்திரி.

பிரதம நீதிபதியைக்கொலை செய்ய மார்ச் மாத ஆரம்பத்தில் சதித்திட்டம் போடப்பட்டது. இதில் இந்த 3 பேரும் முக்கிய பங்கு கொண்டனர். சந்தோஷானந்த், சுதேவானந்த் ஆகிய இருவரும் ஆளுக்கு ஒரு குண்டை காருக்குள் வீச, விக்ரம் அருகில் இருந்தார் என்று இப்போதைய சாட்சியங்களிலிருந்து தெரியவந்துள்ளது என்று மந்திரி ஓம் மேத்தா தெரிவித்தார்.

வெடிகுண்டுகளை வீசிய பிறகு சந்தோஷானந்த், சுதேவானந்த் ஆகிய இருவரும் ஓர் அறையில் சிறிது நேரம் தங்கியிருந்தனர். அந்த அறை கற்பனையான ஒருவரின் பெயரில் வாடகைக்குஎடுக்கப்பட்டிருந்தது. அந்த அறையில் தங்கியிருந்தபோது சந்தோஷானந்த், இந்தியிலும், ஆங்கிலத்திலும் சில கடிதங்களை எழுதச் செய்தார். அக்கடிதங்கள் பல்வேறு நபர்களுக்கு எழுதப்பட்டவை. அவற்றில் ஒரு கடிதம் சுப்ரீம் கோர்ட் பிரதம நீதிபதிக்கு எழுதப்பட்ட மிரட்டல் கடிதமாகும் என்றும் மந்திரி தெரிவித்தார்.

இக்கொலை முயற்சி சம்பந்தமாக இவ்விதம் முக்கிய தகவல்களை சபைக்குத் தெரிவித்த மந்திரி ஓம்மேத்தா, எல்லா விவரங்களையும் தெரிவிப்பது பொது நலனுக்கு உகந்தது அல்ல" என்றார்.

## கிணற்றில் விழுந்து சிறுவன் மரணம்

சென்னை, ஆக. 4—அடையார் கோட்டூர்புரம் அருகே கிணற்றில் விழுந்து சிறுவன் ஒருவன் நேற்று மரணமடைந்தான்.

சிறுவனின் பெயர் விஸ்வநாதன். விளையாடும்போது தவறி விழுந்து மரணமடைந்ததாகக் கூறப்படுகிறது.

தேர்தல் சட்டசீர் திருத்தம்

## மக்கள் சபையில் மசோதா தாக்கல்

புதுடெல்லி ஆக. 4—தேர்தல் சட்டத்தைத் திருத்துவதற்கான மசோதாவை இன்று மக்கள்சபையில் சட்ட மந்திரி எச். ஆர். கோகலே தாக்கல் செய்தார். (இந்த மசோதா பற்றிய விவரம் 2-ம் பக்கம் பார்க்க)

இச் சட்ட திருத்தமானது தற்போது கோர்ட்டுகளின் முன்புள்ள எல்லா தேர்தல் வழக்குகளுக்கும் பொருந்தும்.

இந்த மசோதா மக்கள் சபையில் நாளைய தினம் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும்.

பது காங்கிரஸ் கட்சியிலிருந்து சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ள முன்னாள் மந்திரி மோகன் தாரியா இந்த மசோதா கொண்டு வரப்படுவதை எதிர்த்தார்.

## இன்னும் 5 வருடம் கச்சா எண்ணெய் இறக்குமதி நீடிக்கும்

**சென்னை, ஆக. 4— 1980-ம் ஆண்டுவரை நாட்டில் கச்சா எண்ணெய் (குருடாயில்) இறக்குமதி நீடிக்கும்.**

இண்டியனாயில் நிறுவனத்தின் நிர்வாக இயக்குநர் எஸ். பி. புத்திராஜா இன்று சென்னையில் இந்த தகவலை வெளியிட்டார்.

பம்பாய் நகரை அடுத்த கடலில் பெட்ரோல் கண்டுபிடிக்கும்பணி வெற்றி அடைந்தால் கூட, இன்னும் 5 வருட காலத்திற்கு வெளிநாடுகளிலிருந்து கச்சா எண்ணெயை இந்தியா இறக்குமதி செய்ய வேண்டியிருக்கும் என்று அவர் சொன்னார்.

பெட்ரோலியம் வகைகளின் உபயோகத்திற்கு சமீபத்தில் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டதைத் தொடர்ந்து நாட்டில் எண்ணெய் உபயோகம், 30 சதவிகித அளவுக்கு குறைந்துள்ளதாக இன்று சென்னையில் நடந்த ஒரு கருத்தரங்கில் பேசுகையில் புத்திராஜா குறிப்பிட்டார்.

டீசல் எண்ணெய் உபயோகத்தை 5 சதவிகித அளவுக்கு குறைத்தால் கூட சுமார் 20 கோடி ரூபாய் மதிப்புக்கு அன்னியச் செலாவணி மிச்சமாகும் என்று அவர் சொன்னார்.

உலை எண்ணெய் விலையைக் குறைக்கும் உத்தேசம் இல்லை என்று அவர் குறிப்பிட்டார்.

நாட்டில் பயன்படுத்தப்பட்ட கச்சா எண்ணெயின் அளவு 1950—ல் 33 லட்சம் டன்னாக இருந்தது என்றும், 1973—ல் இந்த அளவு ஒரு கோடியே 40 லட்சம் டன்னாக உயர்ந்துவிட்டது என்றும் அவர் தெரிவித்தார்.

### மந்திரி ராமச்சந்திரன்

தமிழ்நாடு போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் இந்தக் கருத்தரங்கை துவக்கிவைத்தார். டீசல் எண்ணெய் உபயோகத்தில் சிக்கனம் கடைபிடிக்க வேண்டியதன் அவசியத்தை பல அதிகாரிகள் உணரும்படி செய்ய வேண்டும் என்று மந்திரி ராமச்சந்திரன் வற்புறுத்தினார்.

## பறவையை வேடிக்கை பார்த்த வாலிபர், முதலையிடம் பலி

லண்டன், ஆக. 4—பறவைகளைப்பற்றி அறிய அவற்றை வேடிக்கை பார்ப்பது குறிப்பாக மேற்கத்திய நாடுகளில் ஒரு பொழுது போக்காகும். ஆனால் சில சமயங்களில் இது ஆபத்தாகவும் முடியலாம் என்று பிரிட்டிஷ் வைத்திய ஏடு ஒன்று கூறியுள்ளது.

ஒருவர் காட்டில் நீர் நிலை ஒன்றின் அருகே நின்றுகொண்டு பறவைகளை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார். அவரை நோக்கி மெதுவாக ஒரு முதலை வருவதைக்கூட கவனிக்காமல் சுவாரசியமாக பறவைகளை அவர் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியில் அவரை முதலை விழுங்கியது.

இன்னொருவர் வேறுவகையில் உயிரிழந்தார். காட்டில் உள்ள அன்னப்பறவைகளை மிக அருகாமையில் சென்று அவர் ஆராய விரும்பினார். இதற்காக அன்னப் பறவை போல ஒரு பொம்மையைச் செய்து அதைத் தலையில் மாட்டிக்கொண்டார். நீரில் அமிழ்ந்திருப்பதற்கு உதவும் பொருட்டு தனது சட்டைப் பைகளில் இரும்புக் குண்டுகளைப் போட்டுக் கொண்டார்.

இப்படிச் செய்துகொண்டு நீரில் அமிழ்ந்தபடி காட்டு அன்னப் பறவைகளை நெருங்கினார். அந்த நேரத்தில் நீர் ஆழமாக இருந்த இடத்தில் மாட்டிக்கொண்டு நீரில்மூழ்கி இறந்தார்.

குதிரை சவாரி, படகு ஓட்டுதல் முதலான பொழுது போக்கு விளையாட்டுகளில் ஈடுபட்டிருக்கும்போது எந்த அளவுக்கு விபத்து ஏற்பட வாய்ப்பு உள்ளதோ அதே அளவுக்கு தோட்ட வேலை, செல்லப் பிராணிகளை வளர்த்தல் ஆகிய பொழுதுபோக்குகளிலும் ஆபத்து உள்ளதாக ஒரு நிபுணர் தெரிவித்துள்ளார்.

"பொழுது போக்குகளில் உள்ள ஆபத்துகள்" என்னும் தலைப்பிலான கருத்தரங்கில் பேசுகையில் இதுபற்றி அவர் விவரித்தார்.

சில பறவைகளிடம் தொடர்ந்து பழகுவதால ஒருவித சுவாசக் கோளாறு ஏற்படலாம்.

தோட்ட வேலையைப் பொழுது போக்காகக் கொண்டவர்களுக்கு சில வகை செடிகளின் மகரந்தத் தூள் காரணமாகத் தோல் கோளாறு ஏற்படலாம்.

வீட்டில் பூனை வளர்ப்பவர்களுக்கு பூனை பிராண்டுவதால் ஜுரம் ஏற்படலாம். படகோட்டிச் செல்பவர்களுக்கு "உப்பு நீர் கண்கள்" எனப்படும் ஒரு கோளாறு ஏற்படலாம்.

## சென்னை கடலில் என். வி. என். அஸ்தி கரைப்பு

**சென்னை, ஆக. 4—நேற்று தகனம் செய்யப்பட்ட என். வி. என்.னின் அஸ்தி இன்று காலை கடலில் கரைக்கப்பட்டது.**

இன்று காலை 9 மணிக்கே முதலமைச்சர் கருணாநிதி, அமைச்சர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன், அன்பில் தர்மலிங்கம், ராஜாராம் ஆகியோர் என். வி. என். வீட்டுக்கு வந்தனர்.

என். வி. என். மகன்களான சோமு. செல்வம், பாண்டியன். சாக்ரட்டீஸ் ஆகியோரும், நீலநாராயணன், ஆற்காடு வீராசாமி, ஆர். டி. சீதாபதி மற்றும் உறவினர்கள் சுடுகாட்டுக்குச் சென்று அஸ்தியை எடுத்தனர்.

பிறகு காந்தி சிலை அருகே கடலில் அந்த அஸ்தியை 10 மணியளவில் என். வி. என்னின் நான்கு புதல்வர்களும் கரைத்தனர்.

## வானொலி

செவ்வாய், ஆகஸ்ட் 5
சென்னை-1
(416.7 மீ)

காலை
5-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 மக்கள்மேடை
6-35 பாலசந்தர், வீணை (இ. த)
7-00 தமிழ்மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-35 மெல்லிசை
7-45 திரைகானம்
8-00 சிந்தனைத் துளி
8-20 வி. ஆர். கிருஷ்ணன் —பாட்டு
9-30 ஒலிபரப்பு முடிவு
பகல்
12-02 திரை மெட்டுகள்
12-10 தொடக்கப் பள்ளிகளுக்கு
12-50 திரைகானம்
1-00 மாதர் நிகழ்ச்சி
1-30 திரைகானம் —நாதஸ்வரம்
2-10 உயர்நிலைப்பள்ளிகளுக்கு
2-30 கே. சி. சுப்பிரமணியம் —பாட்டு
3-00 ஒலிபரப்பு முடிவு
மாலை
5-00 ஒலிக்கதிர்
5-10 டி.கே. வல்லபைனாட்டு
5-30 திருச்சி அஞ்சல்
6-05 திரைகானம்
6-15 வாத்திய விருந்து
7-00 திரைகானம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 எம். எஸ். எஸ். பாட்டு
8-45 துதிப் பாடல்கள்
9-15 வானொலிக் களஞ்சியம்
9-30 மகளிர் மாண்பு சித்திரம்
10-00 முந்து தமிழ்மாலை திருப்புகழ்
11-00 உலகச் செய்திகள்
11-05 வானிலை—முடிவு

சென்னை-2
(211.3 மீ)
6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-25 கே. சி. சுப்பிரமணியம் —பாட்டு
9-00 சம்ஸ்கிருதத்தில் செய்தி
9-05 செய்திக் கடிதம் —ஆங்கிலம்
9-10 ஒலிபரப்பு முடிவு
12-40 மேற்கத்திய இசை
1-30 தெலுங்கு நிகழ்ச்சி
2-00 ஒலிபரப்பு முடிவு
4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்
8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 நியூஸ் ரீல் (டெல்லி)
9-15 ஸ்பாட்லைட்
9-30 நேஷனல் புரோக்ராம்
9-45 வாத்திய விருந்து
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

திருச்சி
(319. மீ)
6-00 வந்தேமாதரம்
6-10 பாமாலை
6-25 நெறிவிளக்கம்
6-30 விரிவாக்கப் பணியாளர்களுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 பண்ணமுதம்
7-25 தேவாரப் பயிற்சி
7-35 எச். ஆர். ஸ்ரீமதி —பாட்டு
8-20 திரைப்பட இசை
9-00 ஒலிபரப்பு முடிவு
12-02 திரைப்படஇசை
12-10 தொடக்கப் பள்ளிகளுக்கு
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 எச். ஆர். ஸ்ரீமதி —பாட்டு
1-30 வி. ஏ. கிருஷ்ணசாமிப் பிள்ளை
கே. பி. கோவிந்தராஜ பிள்ளை—நாதஸ்வரம்
2-10 உயர்நிலை பள்ளிகளுக்கு
2-30 வண்ணச்சுடர்
2-45 ஒலிபரப்பு முடிவு
5-30 வி. ஏ. கிருஷ்ணசாமிப் பிள்ளை
கே. பி. கோவிந்தராஜு பிள்ளை—நாதஸ்வரம்
6-10 திரைப்பட இசை
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-00 காரைக்கால் நேயர்களுக்கு
8-25 இங்கும் அங்கும்
9-15 பெண்கள் செலவுச் சின்னமா? செல்வச் சின்னமா?-உரையாடல்
9-30 நேஷனல் புரோக்ராம்
9-45 வாத்திய இசை
10-00 அருணகிரிநாதர் விழா
11-00 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00. 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10, 12-00, 2-00. 6-00, 9-00.

விவிதபாரதி
மாலை 6-15 "இசை இன்பம்"—மெல்லிசை நிகழ்ச்சி
இரவு 8-05 ரசிகர் தேன் கிண்ண
இரவு 9-15 திடீர் மனைவி மேடை நாடகம் (5)

## இலங்கையில் இந்திய பாஸ்போர்ட் மோசடி

கொழும்பு, ஆக. 4— இலங்கை குடியேற்ற இலாகாவில் இந்தியர்கள் சம்பந்தமான பாஸ்போர்ட்டுகளில் மோசடி நடந்திருப்பதை போலீசார் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

இந்த மோசடிக்குக் காரணமாக கருதப்படும் ஒருவர் சில தினங்களுக்கு முன்பு காவலில் வைக்கப்பட்டார்.

பிரஜா உரிமை இல்லாத பல இந்தியர்கள் இலங்கை பிரஜா உரிமை பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைத் துப்பறியும் போலீசார் விசாரித்து வருகிறார்கள்.

இந்த மோசடியைச் செய்பவர்கள் மேற்கண்ட முறையைக் கையாண்டிருப்பதாக போலீசார் கூறுகிறார்கள்.

இலங்கைக் குடிமக்களின் உண்மையான பிறந்தநாள் சான்றுகளை வாங்குவது. அதில் உள்ள பெயர்களை ரசாயனப் பொருள்களைக்கொண்டு அழிப்பது, அந்தப் பெயர்களுக்குப் பதிலாகப் பிரஜா உரிமை இல்லாத இந்தியர்களின் பெயரை எழுதுவது, பின்பு அவைகளை வைத்து இலங்கை பாஸ்போர்ட்களை வாங்குவது.

இலங்கைக்கும் இந்தியாவுக்குமிடையே அடிக்கடி போய்வரும் இந்தியபிரயாணிகள் தாம், இலங்கையிலிருந்து நாடு கடத்தப்படுவதைத் தவிர்ப்பதற்காக இந்த மோசடியைப் பயன்படுத்துகிறார்கள் என்று கூறப்படுகிறது. இவ்வாறு பாஸ்போர்ட் பெறுவதற்கு சுமார் ரூ.2000 லஞ்சம் செலுத்துகிறார்கள் என்றும் போலீசார் கூறுகிறார்கள்.

# 36 குண்டுகள் முழங்க மந்திரி என். வி. என். உடல் தகனம்

சென்னை, ஆக. 4—திராவிட முன்னேற்றக்கழகத்தின் ஐம்பெரும் தலைவர்களில் ஒருவராக இருந்தவரும், பிற்பட்டோர் நலத்துறை அமைச்சராக இருந்தவருமான என். வி. நடராசனின் உடல் அரசு மரியாதையுடன் நேற்று மாலை சென்னையில் தகனம் செய்யப்பட்டது.

## மதுரை திண்டுக்கல் நகரங்களில் திடீர் சோதனை

மதுரை, ஆக. 4—மதுரை மத்திய சுங்க இலாகா அதிகாரி துரைராஜ் பாண்டியன் தலைமையில் சுங்க ஊழியர்கள் மதுரை மற்றும் திண்டுக்கல்லில் பல இடங்களிலும் லாரிகளிலும் சோதனைகள் நடத்தி ரூ. 30,000 பெறுமான அந்நிய பண்டங்களை கைப்பற்றினர். இதுசம்பந்தமாக 11பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

மற்றொரு சுங்க ஊழியர் பிரிவினர் திண்டுக்கல்லில் புகையிலை கிடங்கு ஒன்றில் சோதனை நடத்தி ரூ. 3·5 லட்சத்துக்கு வரி ஏய்ப்பு செய்யப்பட்டுள்ளதை கண்டுபிடித்து உள்ளனர்.

போலீசார் 36 முறை குண்டுகள் முழக்கி சோக கீதம் இசைக்க என். வி. நடராசனின் கடைசி மகன் சாக்ரடீஸ், சிதைக்கு தீ வைத்தார்.

### இறுதி ஊர்வலம்

நேற்று அதிகாலை இயற்கை எய்திய அமைச்சர் என். வி. நடராசனின் இறுதி ஊர்வலம் நேற்று மாலை 5 மணிக்கு அவரது வீட்டில் இருந்து புறப்பட்டது.

இறுதி ஊர்வலத்தில் முதலமைச்சர் கருணாநிதி மற்ற அமைச்சர்கள், பல கட்சித் தலைவர்கள் கலந்து கொண்டனர்.

என். வி. என்.னின் பூத உடலை நான்கு போலீஸ் அதிகாரிகள் தூக்கிவந்து அலங்கரிக்கப்பட்ட டிரக்கில் மலர் படுக்கையில் வைத்தனர்.

இறுதி ஊர்வலம் சரியாக மாலை 5 மணிக்குப் புறப்பட்டது. முதலில் போலீசாரின் "பைலட்" ஜீப் செல்ல அதை அடுத்து திமு கழக கொடியை தாங்கி தொண்டர் ஒருவர் சென்றார்.

அவரை அடுத்து 2 ஆயுதப் படைப் போலீசார் துப்பாக்கியை தலைகீழாகப் பிடித்து மெதுவாக நடந்து சென்றனர்.

அவர்களைத் தொடர்ந்து ஒரு ஜீப்பில் அரசாங்க தலைமை செயலாளர் சபாநாயகம் ஐ. ஜி. அருள், கமிஷனர் ராதாகிருஷ்ணன் ஆகியோர் சென்றனர்.

அவர்களை அடுத்து என். வி. என்னின் உடல் வைக்கப்பட்ட டிரக் சென்றது. அந்த டிரக்கில் என்.வி. என்.னின் நான்கு மகன்கள் அமர்ந்து இருந்தனர்.

அந்த டிரக்கை அடுத்து முதலமைச்சர் கருணாநிதியும், மற்ற அமைச்சர்களும் நடந்து சென்றனர்.

அவர்களுக்குப் பின்னால் ஆயிரக்கணக்கான திமுக கழகத் தொண்டர்களும், பொது மக்களும் நடந்து சென்றனர். சாலையில் இருபுறமும் ஆயிரக்கணக்கான மக்கள் கூடிநின்று மறைந்த என்.வி.என்.னுக்கு இறுதி அஞ்சலி செலுத்தினார்கள்.

### சுடுகாட்டில் இறுதி அஞ்சலி

மாலை 5-52-க்கு ஊர்வலம் கிருஷ்ணாம்பேட்டை மயானத்தை அடைந்தது. ஆயுதப் போலீசார் என். வி. என்.னின் பூத உடலை சிதை அருகே வைத்தனர்.

முதலமைச்சர் கருணாநிதியும், அமைச்சர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன் ஆகியோர் கண்கலங்கியவாறு மறைந்த என்.வி.என்.னுக்கு இறுதி மரியாதை செலுத்தினார்கள்.

பிறகு சிதையின்மீது என். வி. என். பூத உடல் வைக்கப்பட்டது. அப்போது என். வி. என்னின் மகன்கள் சோமு செல்வம், பாண்டியன், சாக்ரடீஸ் ஆகிய நால்வரும் "அப்பா, அப்பா" என்று கதறினார்கள்.

பிறகு சங்கு முழங்கியது. போலீசார் சோக கீதம் இசைத்தனர், 36 குண்டுகளை முழக்கி மரியாதை செலுத்தினார்கள். பிறகு துப்பாக்கிகளை தலைகீழாகப் பிடித்தனர். மீண்டும் சோக கீதம் இசைத்தனர்.

சரியாக 6-05 மணிக்கு என். வி. என். பூத உடலுக்கு இருந்த சிதைக்கு அவரது கடைசி மகன் சாக்ரடீஸ் தீ மூட்டினார்.

விம்மி, விம்மி, அழுது, என். வி. என். மகன்களுக்கு முதல்வர் ஆறுதல் கூறி தேற்றினார்.

மயானத்தில் கூடி இருந்தவர்கள், கண்ணீர் மல்க என். வி. என். புகழ் வாழ்க' என்று முழங்கியவாறு கலைந்தனர்.

### பார்லிமெண்டில்

# தேர்தல் சட்டம்: புதிய திருத்த மசோதா வருகிறது

புதுடெல்லி, ஆக. 4— தேர்தல் சட்டத்தைத் திருத்துவதற்காக பார்லிமெண்டில் ஒரு மசோதா கொண்டுவரப்படும். இந்த மசோதா நடப்பு கூட்டத் தொடரிலேயே நிறைவேற்றப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இச்சட்டமானது பின்தேதியிட்டு அமுலுக்கு கொண்டு வரப்படும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

தேர்தல் சட்டத்தில் தற்போதுள்ள சில குறைபாடுகள் காரணமாக கோர்ட்டுகளில் பல தேர்தல் வழக்குகள் போடப்பட்டு அவை நீண்டகாலம் நடைபெறுகிற நிலைமை உள்ளதாக மத்திய அரசு கருதுகிறது.

ஒருவர் எப்போதிலிருந்து தேர்தலில் நிற்கிற "வேட்பாளர்" ஆகிறார் என்பதைத் தெளிவுபடுத்துவதற்காக தேர்தல் சட்டம் திருத்தப்படுகிறது.

குறிப்பிட்ட தொகுதியிலிருந்து போட்டியிடப்போவதாக ஒருவர் அறிவிப்பு வெளியிட்டாலும், தேர்தல் கமிஷன் தேர்தல் பற்றிய அறிவிப்பு வெளியிட்டதற்குப் பிறகுதான் ஒருவர் வேட்பாளராகக் கருதப்படுவார். இதற்கான வகையில் தேர்தல் சட்டம் திருத்தப்படும்.

### அரசு அதிகாரிகளின் பணி

தேர்தல் சமயத்தில் அரசாங்க அதிகாரி ஒருவர் தனது கடமையை செய்வதை, குறிப்பிட்ட தொரு வேட்பாளருக்கு தேர்தலில் உதவி புரிவதாகக் கருதக்கூடாது என்று தெளிவு படுத்தியும் தேர்தல் சட்டம் திருத்தப்படும். தவிர ஒரு மாநில அரசாங்கம் சட்டபூர்வமாகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளுக்கு ஆகும் செலவை, வேட்பாளரின் தேர்தல் செலவுக் கணக்கில் சேர்க்கக் கூடாது என்று கூறியும் தேர்தல் சட்டம் திருத்தப்படும்.

### ராஜிநாமா தேதி

அரசாங்க அதிகாரி ஒருவரின் நியமனம் அல்லது ராஜிநாமா எப்போது அமுலுக்கு வருகிறது என்பது பற்றியும் தெளிவுபடுத்த அரசு சிந்தித்து வருகிறது. நியமனம் அல்லது ராஜிநாமா பற்றி முறைப்படியான கெஜட் அறிவிப்பு வெளி வர பல வாரங்கள் ஆகின்றன என்பதால் அதை வைத்து ஆட்சேபம் கிளப்பக் கூடாது என்று அரசு கருதுகிறது.

### தேர்தல் சின்னம

சமீப ஆண்டுகளில் தேர்தல்களில் பல்வேறு கட்சியினருக்கும் ஒதுக்கப்படும் தேர்தல் சின்னங்களில்சிலவற்றை அவை அரசியல் அல்லது மதம் சம்பந்தத்தைக் கொண்டவையாக உள்ளன என்று வாதிட முயற்சி செய்யப்பட்டுள்ளது. எனவே தேர்தல் சின்னங்களை அரசியல் அல்லது மதச் சின்னங்களாகக் கொள்ளக்கூடாதென்று தெளிவுபடுத்த அரசு நடவடிக்கை எடுக்கவேண்டுமென யோசனை கூறப்பட்டு உள்ளது.

தேர்தல் சட்டம் 1951-ல் அமலுக்கு வந்ததிலிருந்து கடந்த 24 ஆண்டுகளில் அச்சட்டத்தில் பல குறைபாடுகள் தெரிய வந்துள்ளன

இக்குறைபாடுகள் பெரிது படுத்தப்பட்டு அவை ஊழல் என்று பெயரைப் பெறுகின்றன. உள்ளது தேர்தல் விதிமுறைகளை சீர்படுத்தி அதே நேரத்தில் வீணான வழக்குகளைப் போடுவதைத் தவிர்க்கவும் தேர்தல் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்றும் அடிக்கடி கோரப்பட்டு வந்துள்ளது.

தேர்தல் சட்டம் பூராவுமே சீர்படுத்தப்பட வேண்டும் என்றாலும் உத்தேச திருத்தங்கள் தேர்தல் விதிமுறைகளை மேம்படுத்த உதவும் என்று கருதப்படுகிறது.

## "தயவுப் பெருநெறி"

(சுவாமி சரவணானந்தா)

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

### 26. தயவு ஒளியில் அருட்பெருஞ்ஜோதி அகவல் விளக்கம் (6)

11. உரை மனம் கடந்த ஒருபெரு வெளிமேல்
12. அரைசு செய் தோங்கும் அருட்பெருஞ் ஜோதி

நாம் அறிந்தவற்றிலே வான்வெளியே மிகப்பெரிது. ஆனால், நாம் காண்கின்ற இவ் வான வெளியோ, அகண்ட பிரபஞ்சப் பெருவெளியின் அற்பக் கூறு ஆகும். அந்தப் பெருவெளியைப்பற்றி எந்தக் கருவியாலோ மனோகரணத்தாலோ அறியவே முடியாதாம். இதுவே உரை மனங்கடந்த பெருவெளி எனப்படுகின்றது. மனதுக்குப் புலனாகாததை வாக்கால் உரைக்க முடியாது என்பது சொல்ல வேண்டியதில்லை. இப்படி அளப்பரிய, சொல்லொண்ணா வான் பெருவெளி முற்றும் அணுவளவும் இடையீடின்றி நிரம்பியுள்ளவர் நமது அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். ஆம், எங்கும் நிரம்பியுள்ளவர் மட்டுமல்ல என்றென்றும் யாவையும் தோற்றுவித்து ஆண்டு கொண்டும் உள்ளார்.

இந்த அருட்பெருஞ்ஜோதி அரசர்தானே, நம்மையே தம்மின் இரண்டற விளங்கும் தன்மையாய்க் கொண்டு திகழ்கின்றார் என அறிகின்றபோது, நாமெனக் கொண்டிருந்த உயிர், உடம்பு, ஆன்மா யாவும் அவர் தன்மையாய்க் காண்கின்றோம். ஆகையால், அவரையன்றி நாமில்லை. நாம், இப்பொழுது இருக்கின்றோமே என்றால்; உண்மைதான், இருக்கின்றோம்! அவரது தன்மையாகவே உண்ணின்று விளங்குகின்றோம். இது உடற்பற்றோடு கூடிய மருள் நிலையில் விளங்குகின்றதில்லை. அருள் நிலை பெற்று அக நின்றால் அவர் மாய ஒரு நிலை விளங்கும். இப்போதும், நம்மோடு இருக்கும் அவர், நம்மில் பாதியாய் பதியாய் இருந்துகொண்டு, அரைசு ஆக விளங்கி, யாவையும் ஆள்கின்றார் என்பது உண்மையாம்.

(தொடரும்)

## 'கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுக்கு உதாரணம்'

# என்.வி.என்னுக்கு கருணாநிதி புகழ் அஞ்சலி

சென்னை, ஆக 4—கடமை, கண்ணியம், கட்டுப்பாட்டுக்கு உதாரண புருஷராக அமைச்சர் என். வி. நடராஜன் விளங்கியதாக முதல்மைச்சர் கருணாநிதி கூறினார்.

நேற்றிரவு வானொலியில் என். வி. என். மறைவுக்கு அஞ்சலி செலுத்தி சர்வகட்சி தலைவர்கள் பேசினார்கள்.

முதலமைச்சர் கருணாநிதி கூறியதாவது:—

"கொள்கைப்பற்று—விடா முயற்சி—அயராத உழைப்பு—அடக்கம்—எளிமை—இனிமை—இவை அனைத்துக்கும் ஒரு மொத்த வடிவம் தான் மறைந்த தலைவர் என். வி. என்.

பல்லாண்டுக் கால அவரது பொது வாழ்வு, இந்த நாட்டில் சுதந்திரப் போராட்டத்திற்காகவும்—மொழிகாக்கும் பணிக்காகவும்—சமுதாய சீர்திருத்தத் தொண்டுக்காகவும், பகுத்தறிவுப் பிரச்சாரம் புரிவதற்காகவும், பதவிப் பொறுப்பின் வாயிலாக ஏழைகளுக்கு உழைப்பதற்காகவும் செலவிடப்பட்டிருக்கிறது.

பெரியாரின் தொண்டராய் அண்ணாவின் தம்பியாய் எங்களுக்கு ஆருயிர்த் தோழராய் விளங்கிய அந்த கழகக் கருவூலம் மறைந்துவிட்டது.

கடமையைச் செய்து முடிப்பதில் பம்பரமெனச் சுழல்வார்.

கண்ணியம் காப்பதில் முன்னணியில் நிற்பார்.

கட்டுப்பாடு ஒரு சிறிதும் குலையக்கூடாது என்பதில் அவர் காட்டிய ஆணித்தரமான—அழுத்தம் திருத்தமான போக்கு அரசியலுக்கே ஒரு எடுத்துக் காட்டாகும். அவர் கலந்துகொண்ட போராட்டங்கள்—ஏற்றுக் கொண்ட அடக்குமுறைகள்—சிறைவாசங்கள்—அவரை ஒரு லட்சிய மனிதர் என்பதை விளக்கிடும். அவர் செல்லாத கிராமங்களே தமிழகத்தில் இல்லை. அவர் தொடர்பு கொள்ளாத கழகத்தின் கிளை அமைப்புக்களே கிடையாது. தொண்டர்க்குத் தொண்டராய் வாழ்ந்து, கழகத் தலைமையில் ஒருவராய்த் திகழ்ந்த அருமைத் தலைவர் என். வி. என். மறைவு—தாங்க முடியாத வேதனை தரக்கூடியது.

அவருக்கு வயது அறுபத்தி மூன்று—ஆனால் அவரைவிட 11 வயது குறைந்த என்னையும், முறையே 7 வயதும் 9 வயதும் குறைவான நெடுஞ்செழியனையும் அன்பழகனையும் தலைவர்களாக ஏற்றுக் கொண்டு எங்களுக்குநீங்காத துணையாக நின்றார் என்றால் அவரது மாசுமறுவற்ற ஜனநாயகப் பண்புக்கும், கொள்கைப் பற்றுக்கும், கட்சிக் கட்டுப் பாட்டுக்கும், இதைவிட வேறு என்ன சான்று கூற முடியும்?

எதிர்ப்பிலே வளர்ந்து—எதையும் தாங்கும் இதயம் பெற்று—எங்களுக்கெல்லாம் வழிகாட்டியாக இருந்தவர் பிரிந்த துயரத்தை எப்படித்தான் சுமக்க முடியும் எங்களால்!

என்னை நானே தேற்றிக் கொண்டு அவரது அன்புத் துணைவியாருக்கும் அவர் பெற்ற செல்வங்களுக்கும், உற்றார், உறவினர், நண்பர்கள் அனைவர்க்கும் என் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன் என்றார் கருணாநிதி.

### ம. பொ. சி.

தமிழரசுக்கழகத் தலைவரும் மேலவைத் துணைத் தலைவருமான ம. பொ. சிவஞானம் கூறியதாவது:—

பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் என். வி. என். மறைவு தமிழ் இனத்திற்கு, குறிப்பாக—பிற்பட்ட சமூகங்களுக்கு ஏற்பட்ட பேரிழப்பாகும்.

நான் சென்னை மாவட்ட காங்கிரஸ் கமிட்டியின் செயலாளராக இருந்த காலத்திலே அவர் பெத்துநாய்க்கன் பேட்டை வட்ட காங்கிரஸ் கமிட்டித் தலைவராக இருந்தார்.

என்னோடு தோளோடு தோள் சேர்ந்து பாடுபட்டு நாட்டின் விடுதலைக்காகத் தொண்டாற்றினார். அந்த நாள்தொட்டு சுமார் 40 ஆண்டு காலம் நாங்கள் நட்பு கொண்டு பழகி வந்திருக்கிறோம்.

தான் சார்ந்திருந்த தி. மு. கழகத்திற்கும், அதன் தலைவர் அண்ணாவுக்கும் விசுவாசமுடைய ஊழியராக இருந்தார்.

பிற்பட்டோர் நலத்துறையைத் தனக்களித்து கருணாநிதி தமிழக அமைச்சரவையில் சேர்த்துக்கொண்டது, தமக்குக் கிடைத்த நற்பேறு என்று கருதி—பிற்பட்டோர் சமூகத்தின் நற்பலனுக்கு அயராது பாடுபட்டு வந்தார்.

உத்தமமான ஒரு தமிழரை தமிழ் மொழியின் காவலரை திமுக தடுத செல்வத்தை நாடு இழந்துவிட்டது.

### பக்தவத்சலம்

முன்னாள் முதலமைச்சர் பக்தவத்சலம் ஆற்றிய இரங்கலுரை வருமாறு:

பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் என். வி நடராசன் மறைவு தமிழகத்துக்கு ஏற்பட்ட பேரிழப்பாகும்.

ஆரம்ப காலத்திலிருந்தே தொழிலாளர்கள் நலனில் அக்கறையும் ஈடுபாடும் கொண்டிருந்தவர் நடராசன்.

பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் ஆவதற்குமுன்பு தொழிலாளர் நலத்துறை அமைச்சராகப் பணியாற்றி, தொழிலாளர் நலனில் மிக அக்கறை காட்டி வந்தார்.

ஆரம்ப காலத்தில் காங்கிரசில் ஈடுபட்டுப்பணியாற்றிய நடராசன் கட்சியிடத்தில் கருத்து வேற்றுமை கொண்டு திராவிடர் கழகத்தில் சேர்ந்தார்.

எந்தக் கட்சியில் அவர் இருந்தபோதும் கட்சியிடத்தில் உண்மையாகஇருந்தவர். எல்லோருடனும் நன்றாகப் பழகியவர்.

### ஜனாதிபதி தந்தி

மற்றும் ஜனாதிபதி பக்ருத்தீன் அலி அகமது துணை ஜனாதிபதி ஜாட்டி, மத்திய மந்திரி சி. சுப்பிரமணியம் முதலானோர் என். வி. என். மறைவு குறித்து ஆழ்ந்த அனுதாபம் தெரிவித்து தந்திகளை அனுப்பியுள்ளனர்.

கவர்னர் கே. கே. ஷா ஒரு அனுதாபச் செய்தியை வெளியிட்டார்.

### மூக்கையாத்தேவர்

பார்வார்டு பிளாக் கட்சித் தலைவர் பி. மூக்கையாத் தேவர் தமது இரங்கல் செய்தியில் கூறியதாவது:

தொண்டருக்குத் தொண்டராய் அனைத்துக் கட்சியினரது அபிமானத்தையும் பெற்றவராய் தொண்டாற்றியவர் என். வி என். அவரது மறைவு ஈடு செய்ய முடியாத இழப்பாகும். பார்வார்டு பிளாக் கட்சி சார்பில் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# உலகிலேயே 2-வது பெரிய விமான விபத்து: 188 பேர் சாவு

அகாதிர் (மொராக்கோ), ஆக. 4— மொராக்கோவில் நேற்று நடந்த பயங்கர விமான விபத்து ஒன்றில் 188 பேர் மரணமடைந்தனர்.

உலகில் இதுவரை நடந்த இரண்டாவது பெரிய விமான விபத்து இதுவே ஆகும் என்று கூறப்படுகிறது.

மரணமடைந்த பயணிகள் 180 பேரும் மொராக்கோ நாட்டைச் சேர்ந்த தொழிலாளர்கள். விடுமுறையைக் கழிக்க பிரான்சிலிருந்தும், மற்று ஐரோப்பியநாடுகளிலிருந்தும் அவர்கள் திரும்பிக்கொண்டிருந்தார்கள்.

இந்த விமானம் ஜோர்டான் நாட்டுக்குச் சொந்தமானது.

நேற்றுநள்ளிரவுக்குப்பிறகு இந்த விமானம் பிரான்ஸ் நாட்டு விமான தளத்தை விட்டு புறப்பட்டது.

மொராக்கோவிமான தளத்துக்கு வந்துசேர 70 கிலோ

(4-ம் பக்கம் பார்க்க)

# வேலை நேரத்தில் காண்டீனுக்கு போன ஊழியர்கள் சஸ்பெண்டு

பம்பாய், ஆக. 4—வேலை நேரத்தில் ஜாலியாக தேநீர் அருந்த காண்டீனுக்கு மூவர் சென்றனர். அந்த மூவருக்கும் கைமேல் தண்டனை கிடைத்துவிட்டது.

அந்த மூவரும் உடனடியாக சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

அவர்கள் மூவரும் ரெயில்வே ஊழியர்கள். பம்பாயில் உள்ள மத்திய ரெயில்வே தலைமை அலுவலகத்தில் பணிபுரிந்து வந்தவர்கள்.

வேலை நேரத்தில் இடத்தில் இல்லாமல் வெளியே செல்கிறவர்கள் மீது இப்போது மத்திய அரசு கடுமையான நடவடிக்கையை எடுத்து வருகிறது.

# வைத்திய ரத்தினம் பலராமய்யா பதிலளிக்கிறார்

## விக்கலை நிறுத்த மருந்து என்ன?

கேள்வி: எனது மாமாவுக்கு சில நாட்களுக்கு முன் விக்கல் எடுக்க ஆரம்பித்தது. அவருக்கு வயது 50. பலவிதமான வைத்தியம் செய்தும் பயன் இல்லை. இதை நிறுத்த ஏதாவது வழி சொல்லவேண்டும்.

குப்புராஜ்
வேம்படி தாளம்

பதில்: பழைய செருப்பு தோலை சுட்டு கரியாக்கி தூள் செய்து ½ தேக்கரண்டியளவு 6 மணிக்கொருமுறை தேனில் கலந்துகொடுக்கவும். ஒரு வேளை மருந்திலேயே குணமாகிவிடும்.

எலுமிச்சம் பழச்சாறு 2 தேக்கரண்டியளவு தேன் 2 தேக்கரண்டியளவு தண்ணீர் 2 தேக்கரண்டியளவு எல்லாவற்றையும் நன்றாகக் கலந்து வைத்துக்கொண்டு அடிக்கடி தேக்கரண்டியினால் எடுத்து சாப்பிடவேண்டும்.

மலச்சிக்கல் இருப்பின் மலம் சுத்தமாகக் கழியும் அளவுக்கு ஏதாவது ஒரு மருந்தைக் கொடுக்கவும்.

நஞ்சை நிலங்களில் நண்டு குழிகள் இருக்கும். அந்த குழியிலிருக்கும் தண்ணீரை வடிகட்டி உள்ளுக்கு சாப்பிட்டால் அதுவும் விக்கலை நிறுத்தும்.

* * *

### கறுப்பை சிவப்பாக்க முடியுமா?

கேள்வி: முகம் சிவப்பாகவும் குண்டாகவும் ஆக ஒரு வழி கூறவேண்டுகிறேன். என கண்களும் குழி விழுந்து காணப்படுகின்றன. இதற்குக் காரணம் என்ன என்பதையும் தெரிவிக்கவும்.

நாராயணன், புரசை, சென்னை.

பதில்: "[illegible]" என்று யோகி வேமன்னா தெலுங்கில் பாடியுள்ளார். அவர் சொல்வதைத்தான் நாம் நம்பவேண்டும். சிவப்பாக்கி விடுகிறேனென்று யாராவது சொன்னால் நம்பி மோசம் போகாதீர்கள்.

அஜைப்போன்றந்த கண்கள் உடலமைப்பிலேயே குழிக் கண்களாயிருப்பின் அதை வெளியே தள்ள முடியாது. சிலருக்கு நீடித்த நோயினால் கண்கள் குழி விழலாம். அதற்கு நல்ல லேகியங்கள் பசியுண்டாகும்படி சாப்பிட்டு உணவைப் பெருக்கி, உடல் தேற்றினால் கண்கள் பழைய நிலைமைக்கு வரும். கன்னங்கள் கவலைகளினால் ஒட்டிப்போதல் உண்டு. அப்படிப்பட்டவர்கள் கவலையின்றி நல்ல உணவு சாப்பிடின் சரியாகிவிடும்.

* * *

### பல்லிலிருந்து ரத்தம் வருதல்

கேள்வி: பல்லிலிருந்து தினமும் காலையில் ரத்தம் வந்து கொண்டிருக்கிறது. இதற்கு ஒரு மருந்து சொல்லவேண்டுகிறேன்.

முனியப்பன், தர்மபுரி.

பதில்:— படிகாரம் 500 கிராம் பொடித்து ஒரு சட்டியிலிட்டு மேல் மூடியிட்டு அடுப்பிலிட்டு எரிக்கவும். படிகாரம் பொரிந்து வெண்மையாக முட்டை போல் ஆகும். இதைப் பொடி செய்து கொள்ளவும்.

மேற்படி பொடி 200 கி
சாம்பிராணிப்பொடி
செய்த தூள் 50 கி
மிளகு தூள் 25 கி
சித்தரத்தை தூள் 25 கி
உப்பு தூள்
(உலர்த்தவும்) 50 கி

இவைகளை நன்றாகக் கலந்து வைத்துக்கொண்டு காலை மாலை பல் துலக்கவும், ரத்தம் வருவது நின்று விடும். பல் கெட்டிப்படும். இந்த பல்பொடியை எல்லோரும் உபயோகிக்கலாம். பற்கள் கெட்டிப்படும், வாய் நாற்றம் அறும். பயோரியா வெகுவும் நோய்க்கு சிறந்தது.

### மாதவிலக்கு நாட்களில் வலி

கேள்வி: மாதவிலக்கு நாட்களில் கடுமையான வயிற்று

டாக்டர் வி. பலராமய்யா
ஐட்ஜ் பங்களா,
பாஞ்சாலை அம்மன் கோயில் தெரு, அரும்பாக்கம், சென்னை-29

வலி ஏற்படுகிறது. இதற்கு சித்த மருத்துவத்தில் மருந்து என்ன? ஆங்கில முறையைப் போல் பயமில்லாமல் சித்த மருந்தை சாப்பிடலாமா?

(2) தொடை இடுக்கில் வரும் நாட்பட்ட அரிப்பு, ரணத்தடிப்பு, கருமைநிற தோல் ஆகிய வியாதிகளுக்கு ஆண்டுக் கணக்கில் மருந்து சாப்பிட்டும் குணமாகவில்லை. இதற்கு சித்தவைத்தியமுறையில் ஒரு மருந்து சொல்ல வேண்டுகிறேன்.

கற்பகம், சிதம்பரம்.

பதில்: தங்கள் முதல் கேள்விக்கு நவமணி ஓர் திங்கள் இதழில் பதில் அளித்துள்ளோம். சித்த மருத்துவ நவமணியைப்படித்தால் ஆரோக்கியத்துக்கு வேண்டிய பல சந்தேகங்கள் நிவர்த்தி செய்து கொள்ளலாம்.

சித்த மருத்துவத்தில் இவ்வித மாத விலக்கு நோய்க்கு சூதகவலியென்பர். கர்ப்பப்பையில் காற்று சேர்ந்துகொண்டு பல நாட்கள் அவதைகளை விடின் அதுவிக்கங்கண்டுகட்டியாகவும் திரண்டுவிடும்.

இதற்கு ஆங்கில மருத்துவத்தில் மருந்து இல்லை. மருந்துகளை மாற்றி மாற்றி கொடுப்பர். ஏனெனில் குறிப்பிட்ட மருந்துகள் கண்டுபிடிக்கவில்லை.

மிளகு 11
உரித்தபூண்டு பல் 9

இதை அரைத்து ½ அவுன்ஸ் பசுவின் வெண்ணெயில் கலக்கி தூரம் வந்த மூன்று நாட்கள் காலையில் மாத்திரம் சாப்பிடவும். இப்படி மூன்று மாதவிடாய்களில் சாப்பிட சூதக வலி நின்றுவிடும். இந்த வயிற்றுவலி இருப்பவர்களுக்கு கர்ப்பம் தரிக்காது.

மற்றொரு மருந்து: எருக்கம் இலை அதாவது மஞ்சளாக பழுத்த இலையை எடுத்து சுகசுகி பிழிந்து ஒரு சொட்டுகள் ஒரு தேக்கரண்டி சர்க்கரையில் விட்டு தூரம் வந்த மூன்று நாட்களும் காலையில் மாத்திரம் சாப்பிடவும். இதுவும் மேற்படி சூதகவலியை நிறுத்தும்.

தங்கள் இரண்டாவது கேள்விக்கு கடந்த திங்கள்கிழமை இதழில் வல்லாரை சூரணம் தைலம் பற்றி எழுதியுள்ளேன். அதைப் பார்க்கவும்.

பத்தியம்:—மருந்து சாப்பிடும் நாட்களில் புலால் சாப்பிடக்கூடாது.

### விரைவாதம்

கேள்வி: எனக்கு விரைவாதம் ஏற்பட்டிருக்கிறது. நின்றுகொண்டு வேலைச்செய்தால் வீக்கம் அதிகமாகிறது. இதற்கு ஒரு வைத்தியம் சொல்லவேண்டுகிறேன்.

முனிராஜ, தர்மபுரி.

பதில்: தங்கள் வயதைக் குறிப்பிட்டிருந்தால் நலமாயிருந்திருக்கும். தங்கள் நோய்க்கு மலச்சிக்கல் இருக்கப்படாது.

கச்சக்காயினுள் இருக்கும் பருப்பு 40 கிராம், சுக்கு 10 கிராம், கழற்சிக்காய்மேன் தோல் 10 கிராம் இவைகளை தண்ணீர்விட்டு அரைத்து மெழுகு போலானதும் பட்டாணி அளவு மாத்திரைகளாக நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும். மேற்படி சரக்குகளெல்லாம் நாட்டு மருந்து கடைகளில் கிடைக்கும்.

காலையில் ஒரு மாத்திரை—மாலையில் ஒரு மாத்திரை பொடிசெய்து தண்ணீரில் சாப்பிடவும்.

அதையே தண்ணீரில் உறைத்து வீக்கமுள்ள விரையின்மேல் பற்று போடவும். பற்று போட்டபின் நெருப்பனலில் காட்டினால் விசேடம்.

மேற்படி மருந்தை 20 நாட்கள்வரை சாப்பிடலாம்.

பத்தியம்: கிழங்குவகைகள் புலால் சாப்பிடக்கூடாது.

* * *

### புழுவெட்டு

கேள்வி: எனக்கு புழுவெட்டு ஏற்பட்டிருக்கிறது. இதைப்போக்க என்ன செய்ய வேண்டும்.

கே. கந்தசாமி
வெள்ளகோயில்

பதில்: படிகாரம் ஒரு கட்டி வாங்கி தண்ணீரில் நனைத்து முகத்தில் பிரதி தினமும் தேய்க்கவும். புழுவெட்டுள்ள இடங்களில் முக்கியமாக தேய்க்கவும் சருமத்தின் அடிப்பாகத்தில் சிறு பேன்கள் உள்ளன. அவை முடியின் வேர்களை தின்றுவிடுவதால் முடி உதிர்ந்து போகும். படிகாரத்தை தொடர்ந்து 2, 3 மாதங்கள் தேய்த்துவர பூச்சிகள் செத்து முடி வளரும்.

கேள்வி எழுதும் போது தங்கள் வயதையும் குறிப்பிடுங்கள், புலால் சாப்பிடுபவர்களா, சைவமா என்பதையும் குறிப்பிட்டால் நலம்.

பன்றிநெய் கிடைத்தால் அதையும் தடவலாம். தலையில் சொட்டைகள் புழுவெட்டுகள் குணமாகி முடி கறு கறு வென்று வெளி வரும்.

### இருமலைப் போக்க மருந்து

கேள்வி: என் வயது 32. அடிக்கடி இருமல் வருகிறது. ஆனால் கோழை வருவதில்லை. வறட்டிருமல் மாதிரி இருக்கிறது. இது எதனால் வருகிறது என்பது தெரியவில்லை. டாக்டரைக் கேட்டால் T.B யாக இருக்கும். எக்ஸ்ரே எடு என்று சொல்கிறார். எனக்கு வசதிகுறைவு. அதுவுமன்றி முப்பது ஊசிகள் போட வேண்டுமென்று சொல்கிறார்.

ஆகவே தாங்கள் ஒரு நல்ல மருந்து சொல்லி இந்நோயை குணப்படுத்தக்கோருகிறேன்.

ரமேஷ்,
தஞ்சாவூர்,

பதில்: அதிமதுரம், அக்கராகாரம் என்ற இரண்டு சரக்குகளையும் நாட்டு மருந்து கடையில் வகைக்கு 50 கிராம் வாங்கவும். அக்கராகாரம் குச்சிகள் போலிருக்கும். அதை ஒன்றிரண்டாய் தட்டி சட்டியிலிட்டு வாசனை கிளம்ப வறுத்து எடுக்கவும், அதிமதுரத்தை வறுக்கக்கூடாது. இரண்டையும் சேர்த்து இடித்து சல்லடையில் சலித்து பொடியை புட்டியிலடைக்கவும்.

இதைக் காலை—மதி—மாலை அரை தேக்கரண்டியளவு எடுத்து அரை தேக்கரண்டியளவு சீனி சேர்த்து வாயிலிட்டு சுவைத்து சாப்பிடவும் இதை எத்தனை நாட்கள் சாப்பிட்டாலும் உடலுக்கு உபாதை கொடுக்காது. கபம், சளி இருமல் உள்ளவர்கள் எல்லோரும் சாப்பிடக்கூடியது.

---



## ரெயில்வே உபயோகிப்போர் கமிட்டியை மாற்றியமைக்க உத்தரவு

புதுடெல்லி, ஆக. 4— ரெயில்வே உபயோகிப்போர் ஆலோசனை கமிட்டிகளை எல்லா கட்டங்களிலும் மாற்றியமைக்குமாறு ரெயில்வே அமைச்சர் கமலபதி திரிபாதி உத்திரவிட்டுள்ளதாக அதிகாரபூர்வ பத்திரிகை குறிப்பு ஒன்று தெரிவிக்கிறது.

ரெயில்வே பணிகளை அபிவிருத்தி செய்வதில் பொது மக்கள் பயனுள்ள முறையில் திறமையாக பங்கு கொள்ள வேண்டியதை கருதி, அவ்வாறு அக்கமிட்டிகளை மாற்றியமைக்குமாறு அவர் உத்திரவிட்டுள்ளார்.

தற்போதுள்ள டிவிஷனல் ரெயில்வே உபயோகிப்போர் கமிட்டி ஆகஸ்டு 31ந் தேதி வரையிலும் மண்டல கமிட்டி செப்டம்பர் 30ந் தேதி வரையிலும் நீடிக்க உத்திரவிடப்பட்டுள்ளது. அதற்குள்ளாக புது கமிட்டிகள் அமைக்கப்படும்.

## கிரசின்: தவருன உபயோகத்தை தடுக்க உத்தரவு

புதுடெல்லி, ஆக. 4— கிரசினை தவருன முறையில் உபயோகிப்பதைத் தடுக்க மத்திய அரசு நடவடிக்கை எடுத்துள்ளது.

1966ம் வருஷ கிரசின் (உபயோகக் கட்டுப்பாடு) உத்தரவின் கீழ் சமையலுக்கும், விளக்குகளுக்கும்தான் கிரசினைப் பயன்படுத்தலாம்.

அந்த உத்தரவு இப்போது திருத்தப்பட்டுள்ளது. சப் இன்ஸ்பெக்டர் அல்லது அதற்கு மேற்பட்ட அந்தஸ்துள்ள போலீஸ் அதிகாரி அல்லது அந்த அந்தஸ்துக்கு சமமான அந்தஸ்துள்ள வேறு மத்திய அரசு அல்லது மாநில அரசு அதிகாரி எந்த இடம் அல்லது கட்டிடத்துக்குள்ளும் சென்று சோதனையிடவும் மத்திய உத்திரவு மீறப்படிருப்பதாக அவர் கருதினால் கிரசின் ஸ்டாக்கைக் கைப்பற்றவும் திருத்தப்பட்ட உத்தரவு அதிகாரமளிக்கிறது.

இந்த உத்தரவு உடனடியாக அமலுக்கு வருகிறது.

## கிரசின் விலை லிட்டருக்கு ஒரு காசு உயர்வு

சென்னை ஆக 4—சென்னை நகரில் மண்ணெண்ணெய் விலை ஒரு லிட்டருக்கு ஒரு பைசா அதிகரிக்கப்படுகிறது: இந்தப் புதிய விலை உடனடியாக அமலுக்கு வருகிறது.

இதன்படி, இதுவரை ஒரு லிட்டர் ரூ. 1-16-க்கு விற்று வந்த மண்ணெண்ணை இனி, ஒரு லிட்டர் ரூ. 1-17-க்கு விற்கும். அரை லிட்டர் மண்ணெண்ணை விலை 59 காசுகளாகும்.

மண்ணெண்ணை மொத்த விலை 200 லிட்டர் கொண்ட ஒரு பாரல் விலை ரூ. 225.69 ஆக நிர்ணயிக்கப்படுகிறது. இதில் விற்பனை வரியும் அடங்கும்.

தமிழ்நாடு அரசு சனிக்கிழமை அன்று வெளியிட்ட ஒரு விசேஷ கெஜட்டில், இந்த விலை உயர்வு உத்தரவு அறிவிக்கப்பட்டுள்ளது.

இதேபோல பெட்ரோல், டீஸல் ஆகியவற்றின் விலைகளும் ஆகஸ்டு 1-ந் தேதி முதல், லிட்டருக்கு 1 காசு உயர்த்தப்பட்டுள்ளன. இவற்றின் சர்சார்ஜ் உயர்வே இதற்குக் காரணமாகும்.

## ஆண் வயிற்றில் கருப்பை

கோவை, ஆக. 4—கோயமுத்தூரில் ஒருவர் குடல் இறக்கம் நோய்க்காக ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். அவருக்கு வயிற்றில் ஆறுவை சிகிச்சை நடைபெற்றபோது பெண்ணுக்குரிய கருப்பை இருப்பதை டாக்டர்கள் கண்டனர். இந்த அதிசய சம்பவம் கோயமுத்தூர் மருத்துவக்கல்லூரி ஆஸ்பத்திரியில் நடந்துள்ளது.

அந்த கருப்பையானது பருவம் அடையும் வயதை எட்டியுள்ள பெண்களுக்கு இருக்கும் கருப்பை போன்றிருந்தது. டாக்டர்கள் ஆறுவை சிகிச்சை செய்து இந்த கருப்பையை அகற்றினர். அதனால் அவருக்கு எந்த விதமான கஷ்டமும் ஏற்படவில்லை. இப்பொழுது அவர் ஆஸ்பத்திரியில் குணமடைந்து வருகிறார்.

## ஆடம்பரபங்களாக்களில் சோதனை: கோவையிலும் மேற்கொள்ளப்படும்

சென்னை, ஆக. 4 – வரி ஏய்ப்பைக் கண்டுபிடிக்க சென்னை ஆடம்பர பங்களாக்களில் சோதனையிடும் வேலை அடுத்த படியாக மில் அதிபர்களின் நகரான கோவை நகரிலும் மேற்கொள்ளப்படும்.

இத்தகவலை இவ்விதச் சோதனைகளுக்குப் பொறுப்பான உயர் அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

சென்னை நகரில் நடத்தப்படும் சோதனை பற்றி அவர் குறிப்பிடுகையில் சென்னையில் பணக்காரர்கள் வாழும் 40 பகுதிகளில் அமைந்த 750 ஆடம்பர பங்களாக்களில் சோதனை நடத்தப்படும் என்று தெரிவித்தார்.

இவ்வேலையைத் துரிதப்படுத்த அதிகாரிகள் என்ஜினீயர்கள் அடங்கிய 2 வது அணி நிறுவப்படுகிறது என்றும் அவர் சொன்னார்.

சினிமா நடிக, நடிகையர் மட்டுமல்லாமல் என்ஜினீயர் வக்கீல், டாக்டர், ஆடிட்டர்கள் ஆகியோரும் தமது பங்களாக்களின் விலையைக்குறைத்துக் காண்பித்திருப்பதாக சந்தேகிக்கப்படுகிறது என்றும் அவர் கூறினார்.

சென்னை நகரில் பங்களாக்களின் உண்மை விலையை மதிப்பிடுவது தாமதமாக நடைபெறுவதற்குப் பல காரணங்கள் உள்ளன என்று அவர் குறிப்பிட்டார். உதாரணமாக பளிங்குக் கற்களில் பல விலைகளில் பலவகை இருக்கின்றன என்றும் இவற்றை மதிப்பிடுகையில் தாமதம் ஏற்படுவதாகவும் கூறினர். வேண்டாத விளைவுகளைத் தவிர்க்க இனி பங்களா சொந்தக்காரர்களே உண்மை விலையைத்தெரிவிக்க முன்வருவர் என்று எதிர்பார்ப்பதாகவும் அவர் சொன்னர்.

சொத்து மதிப்பைக் குறைத்துக் காண்பித்தால், அதில் அபராதம் உள்பட கடுமையான தண்டனை விதிக்கப்படும் என்றும் அவர் தெரிவித்தார். உதாரணமாக ரூ 10 லட்சம் மதிப்புள்ள பங்களா 5 வருட காலமாக ரூ 5 லட்சமாக கணக்கு காட்டப்பட்டிருந்தால் குறைந்தபட்ச அபராதம் ரூ. 2½ லட்சம் என்றும் அதிகபட்ச அபராதம் ரூ. 50 லட்சம் என்றும் அவர் தெரிவித்தார்.

7-ம் பக்கம் தொடர்ச்சி

லாம் பிரிவினை செய்யப்படுவதில்லை. கைது என்பதுவெறும் அரசியல் கட்சிகளைப் பொருத்ததும் அல்ல, அது அந்தஸ்தையும் பொருத்ததல்ல ஒருவர் என்ன செய்கிறார். என்ன செய்யத் திட்டமிடுகிறார் என்ன செய்யக்கூடும், என்ன செய்ய ஆயத்தமிடுகிறார் என்பதைப் பொருத்த விஷயம் அது. ஆனால் சட்டத்தை மீருத பிரஜை எந்த விதமான அச்சமும் அடைய வேண்டியதில்லை.

மறுபடியும் பொதுவாக அவசர நிலைமை பற்றி நிருபர் கேட்டார்.

### அவசர நிலை எதுவரை நீடிக்கும்?

கேள்வி; அவசர நிலைமை இன்னும் எவ்வளவு காலம் நீடிக்கும்?

பதில்: எவ்வளவு காலம் அவசியமோ அவ்வளவு காலம்.

கேள்வி: தமிழ் நாட்டில் என்ன நடைபெறுகிறது என்பது உங்களுக்குத் தெரியும் என்று கூறினீர்கள். நீங்கள் அதைச் சற்று விளக்கிக் கூறுவீர்களா?

பதில்: விரிவாக விளக்குவதற்கு என்ன இருக்கிறது?

மேற்கண்டவாறு பிரும்மானந்த ரெட்டி கூறினர்.

## மில் ஊழியர் சம்பளம்: கோவை தொழிலாளிக்குத்தான் மிக அதிகம்

கோவை, ஆக. 4–பஞ்சாலைத் தொழிலாளர்களில நாட்டிலேயே கோவைத் தொழிலாளர்கள்தான் அதிக சம்பளம் வாங்குபவர்கள்.

வாழ்க்கைச் செலவுப்புள்ளி அதிகமாக உயர்ந்ததே இதற்குக் காரணமாகும்.

கடந்த மார்ச் மாதத்தில் தமிழ்நாடு ஆலைத் தொழிலாளி ஒருவர், குறைந்தது ரூ. 441·98 ஊதியம் பெற்றிருக்கிறார்,

அதே நேரத்தில் பம்பாயில் ரூ. 413·73ம் அகமதாபாத்தில் ரூ 412·67ம் ஒரு தொழிலாளி சம்பளமாகப்பெற்றிருக்கிறார்.

கடந்த மார்ச்சில் வாழ்க்கைச் செலவுப் புள்ளி 1552 ஆக இருந்தது, ஜூன் மாதத்தில் 1561 ஆக உயர்ந்தது.

அரிசியின் விலை மிக அதிகமாக உயர்ந்ததே இதற்குக் காரணமாகும்.

## உரிமைகள் மீது கைவைக்க மாட்டோம்: குஜராத் முதல்வர் பேச்சு

பம்பாய், ஆக. 4—குஜராத்தில் மக்களின் சிவில் உரிமைகளுக்கு அரசு குந்தகம் விளைவிக்காது என்று குஜராத் முதல்வர் பாபுபாய் படேல் கூறினர்.

இந்திய வர்த்தக சபைக் கூட்டத்தில் பேசுகையில் அவர் இவ்வாறு சொன்னர்.

ஊர்வலம் பேரணி ஆகியவற்றின் மீது அரசு அடியோடு தடை விதிக்கப்பட மாட்டாது. எனினும் வன்முறை கடுமையாக ஒடுக்கப்படும் என்றார் அவர். எதிர்ப்புக் கருத்தைத் தெரிவிக்க காந்தீய வழி இன்னமும் பயனுள்ளதே என்று வலியுறுத்திக் கூறுகையில் அவர் இவ்வாறு குறிப்பிட்டார்.

"எங்களுக்கு ஆட்சி நடத்த உரிமை இல்லை என்று மக்கள் கருதினால் பதவியிலிருந்து விலகுமாறு எங்களிடம் கூறலாம். அவ்விதம் கூற மக்களுக்கு உரிமை உள்ளது. பதவியில் நீடிப்பதற்காக குண்டாந்தடிகளையும், துப்பாக்கிகளையும் பயன்படுத்தமாட்டோம்" என்றார் அவர்.

கடந்த ஜூன் 26ந் தேதிக்குப் பிறகு குஜராத்தில் துன்புறுத்தலோ, வன்முறையோ, இல்லை பொதுச் சொத்து அல்லது தனியார் சொத்து நாசப்படுத்தப்படவில்லை' என்றும் அவர் சொன்னர்.

## அவசர நிலை எதுவரை நீடிக்கும்? மத்திய உள்துறை மந்திரி பதில்

சென்னை, ஆக. 4— தேவைப்படும் காலம் வரை அவசர நிலை நீடிக்கும் என்று மத்திய உள்துறை மந்திரி பிரும்மானந்த ரெட்டி கூறினர்,

இந்தியாவில் அவசர நிலையை அமல் படுத்துவதில் மக்கள் நன்கு ஒத்துழைத்திருப்பதாகவும், அது அறிவிக்கப்பட்டபின் நாட்டின் எப்பகுதியிலும் வன்முறையைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை என்றும், இப்போது நாட்டில் வதந்திகளைப் பரப்பும் போக்குக் குறைந்து, குறைகூறும் பேச்சு தணிந்து, அதிகக் கட்டுப்பாடும், பயனுள்ள காரியங்களில் ஈடுபாடும் வளர்ந்திருப்பதாகவும் பிரும்மானந்த ரெட்டி கூறினர்.

ஹைதராபாத்தில் இருந்து நேற்று காலை அவர் சென்னைக்கு வந்தார். ராஜ்பவனில் அவரை நிருபர்கள் பேட்டி கண்டனர்.

நிருபர்; மாநில அரசுகள் அவசர நிலையை எப்படி அமல் படுத்துகின்றன? அவைகளைப் பற்றி உங்கள் மதிப்பீடு என்ன?

### எங்களுக்கு தெரியும்

பிரும்மானந்த ரெட்டி:— (பலமாகச் சிரித்துக் கொண்டே) மொத்தமாகப் பார்த்தால், எல்லா மாநிலங்களும் ஒத்துழைத்து வருகின்றன. ஆனால் ஒருசில மாநிலங்களில் என்ன நடக்கிறது என்பதும் எங்களுக்குத் தெரியும்.

சில மாநிலங்கள் என்றதை விளக்குமாறு கேட்டதற்கு தமிழ்நாடு, குஜராத் ஆகிய இரண்டையும் அவர் குறிப்பிட்டார்.

கேள்வி: தமிழ்நாட்டிலும் குஜராத்திலும் என்ன நடக்கிறது?

பதில்: இதைப்பற்றி ஏற்கனவே நான் பார்லிமெண்டில் கூறியிருக்கிறேன்.

பிரதமரின் பொருளாதார திட்டத்தை அமல்படுத்துவதில் தமிழ்நாடு அரசு ஆர்வமாக இருப்பதாக ஒரு நிருபர் குறிப்பிட்டார். இத் திட்டங்களையும் அதன் அமலையும் குறிப்பிட்டு ஓர் ஆங்கில நாள் இதழில் 2 பக்க விளம்பரத்தை மாநில செய்தித் துறை இயக்குநர் வெளியிட்டிருக்கிறார் என்றார் அவர்.

மற்றொரு நிருபர் குறுக்கிட்டு, பிரதமரின் திட்டத்தை அமல்படுத்துவதில் தான் முன்னணியிலிருப்பதாக உரிமை கொண்டாடுவது தமிழக அரசின் நோக்கம் என்றார்.

### சுமுகமான போட்டி

மந்திரி: யாரும் முன்னணியில் இருப்பதாக உரிமை கொண்டாடலாம். ஆனால் உரிமை கொண்டாடுவது வேறு, அமல் வேறு. மற்றும் சில மாநிலங்களும் "நாங்கள் இன்னும் சிறந்த முறையில் அமல் படுத்துகிறோம்" என்று கூறமுடியும். அமலிலும் சாதனையிலும் பல்வேறு மாநிலங்களுக்கிடையிலும் போட்டி இருக்கமுடியும். ஆனால் இந்த போட்டி சுமுகமான போட்டியாக இருக்க வேண்டும்.

இதன் பின்பு கேள்வி வேறு அம்சத்துக்கு திரும்பியது.

கேள்வி: உங்களுடைய வருகையின் நோக்கம் என்ன? இங்குள்ள நிலவரத்தை மதிப்பிட வந்திருக்கிறீர்களா?

பதில்: நண்பர்கள் எல்லோரையும் பார்க்க வந்திருக்கிறேன்.

கேள்வி: நண்பர்கள் என்பதில் தமிழ்நாடு முதல்வரும் இடம் பெறுவாரல்லவா?

பதில்: ஒவ்வொருவரும்;

### முக்கியமான வருகை

கேள்வி; உங்களுடைய வருகை மிகவும் முக்கியத்வம் வாய்ந்தது என்று கருதப்படுகிறது. அவசர நிலை அறிவிப்பை ஒட்டிய சட்டங்களின் அமலில் மாநில அரசு தவறியவைகளை சுட்டிக்காட்டி அதைத் திருத்தவந்திருக்கிறீர்களா?

பதில்: இல்லை, இல்லை. அதற்காக நான் இங்கு வர வேண்டிய அவசியமே இல்லை.

இத்துடன் அந்த விஷயம் முடிந்து அவசர நிலையை ஒட்டிய கைது பிரச்னைக்குக் கேள்வி திரும்பியது.

கேள்வி:—அவசர நிலை அறிவிப்புக்குப் பின், தென்னிந்தியாவில் பத்திரிகையாளர்கள் கைதாகவில்லை. ஆனால் வட இந்தியாவில் நிலவரம் இதுவல்ல. அங்கு சில பத்திரிகையாளர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

### அச்சம் தேவை இல்லை

பதில்: பத்திரிகையாளர்கள், மற்றவர்கள் என்றெல்

(5ம் பக்கம் பார்க்க)

## காமராஜுடன் சந்திப்பு

சென்னை, ஆக. 4— சென்னைக்கு வந்திருக்கும் பிரும்மானந்தரெட்டி, நேற்று காமராஜரை அவரது வீட்டில் சந்தித்தார்.

சுமார் 10 நிமிட நேரம் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர்.

இந்தச் சந்திப்பு மரியாதை தெரிவிப்பதற்கான சந்திப்பே என்று பழைய காங்கிரஸ் வட்டாரம் கூறியது.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

ஸ்ரீ ஜீவ காருண்ய கடாக்ஷி அம்மன் பிரம்மோற்சவம்: 5-ம் நாள்: எஸ். பி. ராமு எஸ். பி. சாரதா குழுவினர் இன்னிசை வழங்குவர்: இரவு 8 மணி.

கராத்தே மாத இதழ் வெளியீட்டு விழா: தலைமை கே. ஆர். ஷெனாய்: வெளியீடு பி. சிவந்தி ஆதித்தன். முதல் பிரதி பெறுநர்: தமிழ்வாணன். இடம் 29, எம். வேணுகோபால் அவென்யூ சேத்துப்பட்டு, மாலை 5 மணி.

ஸ்ரீ கருக்காத்தம்மன் 51-ம் ஆண்டு விழா: 2-ம் நாள், வடலூர் வள்ளலும் தணிகை வள்ளலும் எனும் தலைப்பில் கே. குணபூஷணம் உபந்யாசம். இரவு 8 மணி. நாஞ்சில் முருகேசன் கோவை ஜிக்கி குழுவினர் இன்னிசை இரவு 10-30 மணி

# ரூ. 25,000 நகைகள் மீட்பு: வாலிபர் கைது

வேலூர், ஆக. 4—ஆறு இடங்களில் வீடுபுகுந்து திருடிய காளி என்பவரை வேலூர் போலீசார் சென்னையில் கைது செய்தனர்.

கைது செய்யப்பட்ட காளிக்கு வயது 30. இவருக்கு வேலாயுதன், சுப்பிரமணி என்ற வேறு பெயர்களும் உண்டு.

வேலூர் பகுதியில் இவர் ரூ 37ஆயிரம்மதிப்புள்ளநகைகள் துணிகள், பாத்திரங்கள் முதலியவைகளைத் திருடியதாகக் கூறப்படுகிறது. இவர் கொடுத்த தகவலின்பேரில் 25ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகளை போலீசார் கைப்பற்றி இருக்கிறார்கள்.

கைது செய்யப்பட்ட காளி ஏற்கெனவேமூன்றுஆண்டுகள் சிறைவாசம் செய்தவர். இரண்டு வீடுகளுக்குசொந்தக்காரர்என்றும்கூறப்படுகிறது.

# அமெரிக்க விண்வெளி கலத்தில் ஏறிச்செல்ல இந்தியருக்கு அழைப்பு

ஆமதாபாத், ஆக. 4—அமெரிக்கா 1980-ம் ஆண்டு வாக்கில் பறக்கவிட இருக்கும் விண்வெளிக் கலத்தில் ஏறிச் செல்ல இந்திய விஞ்ஞானிக்கு அழைப்பு விடப்பட்டுள்ளது.

அமெரிக்காவின் விண்வெளிப் பயணங்களை நிர்வகிக்கும் 'நாசா' அமைப்பின் சர்வதேச விவகார துணை நிர்வாகியான ஆர்னல்ட் புருட்கின் இந்த அழைப்பை விடுத்துள்ளார்.

1980ம் ஆண்டு வாக்கில் அமெரிக்கா ''விண்வெளி ஓடம்'' என்று வருணிக்கத்தக்க விண்வெளி ஆராய்ச்சிக் கூடத்தை வானில் பறக்கவிட இருக்கிறது

### அழைப்பு

இந்த விண்வெளிக்கலத்தில் மேற்கொள்வதற்கான பரிசோதனை ஒன்றைஇந்தியா தெரிவிக்கலாம். அப்பரிசோதனையை நேரில் நடத்துவதானால் இந்திய விஞ்ஞானி ஒருவர் அந்த விண்வெளிக் கலத்தில் ஏறிச்செல்லலாம் என்று புருட்கின் கூறினார்.

அமெரிக்க விண்வெளித் திட்டத்தில் பங்கு கொள்ள இருக்கும் ஐரோப்பியநாடுகளும் ஒரு விஞ்ஞானியை அனுப்பிவைக்கலாம் என்றார் அவர்.

### செலவு குறைவு

''விண்வெளி ஆராய்ச்சிக் கூடத்தை வானில் அனுப்பும் திட்டத்துக்கு அப்பாலோ' திட்டத்துக்கு ஆனதைவிட குறைவாகவே செலவு ஆகும், எனினும் அது விண்வெளிப் பயணத்தில் முக்கிய மைல்கல்லாக விளங்கும். ஏனெனில் விண்வெளிக் கலத்தைவானில் செலுத்தும் ராக்கெட்டை மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்கான முயற்சி இத்திட்டத்தின்போது மேற்கொள்ளப்படும் என்று புருட்கின் சொன்னார்.

விண்வெளி ஓடத்தில் பொருட்களை ஏற்றிச் செல்வதற்கென 60 அடி நீளமும் 15 அடி அகலமும் கொண்ட சரக்குப் பகுதி இருக்கும். அதில் பூரா வசதிகளைக் கொண்ட ஆராய்ச்சிக்கூடமும் இருக்கும். இந்த விண்வெளி ஓடத்தை உருவாக்குவதில் டிசைன் வேலை அநேகமாக முடிந்துவிட்டது என்றும் அவர் தெரிவித்தார்

ஒரே ராக்கெட் மீண்டும் மீண்டும் பயன்படுத்தப்படும் என்பதால செலவு நிச்சயம் குறையும் என்றார் அவர்.

வானில பறக்கும்செயற்கை கோளின் உதவியுடன் இந்தியாவில் பலநூறு கிராமங்களுக்கு மக்களுக்கு டெலிவிஷன மூலம் பல விஷயங்களைத் தெரிவிப்பதற்கான திட்டம் அமுல படுத்தப்பட்டுள்ளதல்லவா? இத் திட்டத்தில ''நாசா'' அதிகாரியான புருட்கின் முக்கிய பங்கு வகித்தார்.

ஆகஸ்ட் 1ந்தேதி இத்திட்டம் துவக்கி வைக்கப்பட்டபோது அந்த விழாவில் புருட்கின் கலந்துகொண்டார்.

இத்திட்டத்துக்கு உதவும் செயற்கை கோளானது அமெரிக்க ''நாசா'' அமைப்பினால் தயாரிக்கப்பட்டு வானில் செலுத்தப்பட்டதாகும். இந்தியாவுக்கு உதவ இந்தசெயற்கைகோளைமட்டும் தான் நாங்கள் அளித்தோம். மற்ற வசதிகளை இந்தியாதானாக ஏற்படுத்திக்கொண்டது என்று அவர் குறிப்பிட்டார்.

### உதவத்தயார்

டெலிவிஷன் காட்சிகளை அஞ்சல் செய்ய இந்தியா ஓராண்டு காலத்துக்குத்தான் அமெரிக்க செயற்கைகோளை பயன்படுத்த முடியும்.

இதுபற்றி அவர் குறிப்பிட்டு இந்தியா சொந்தமாக தகவல் தொடர்பு செயற்கை கோளை தயாரித்துக் கொள்வதற்கு இந்தியாவுக்கு உதவி செய்ய ''நாசா'' அமைப்பு தயார் என்று புருட்கின் சொன்னார்.

## விமான விபத்து

2-ம் பக்கத் தொடர்ச்சி

மீட்டர் தூரம் இருந்தபோது மலைப்பகுதியில் மோதி விபத்துக்குள்ளாகியது.

விமானத்தில் பயணிகள் 181 பேர் இருந்ததாகவும், விமானிகள் 7 பேர் இருந்ததாகவும் போலீசார் கூறினர். இவர்களில் ஒருவர்கூட உயிர் பிழைக்கவில்லை என்று கூறப்படுகிறது.

விபத்து நடந்து உடனேயே மீட்புப்பணிக்காகஹெலிகாப்டர் ஒன்று அனுப்பப்பட்டது.

விபத்து நடந்த இடத்தில் விமானமும், மனித உடல்களும் உருக்குலைந்து காணப்பட்டதாக மீட்புக் கோஷ்டியினர் தெரிவித்தனர்.

1000 மீட்டர் உயரத்தில் மலை உச்சியில் மோதி விமானம் கீழே விழுந்திருக்கிறது.

பிரான்சில் சுமார் 2 லட்சத்து 25 ஆயிரம் மொராக்கோ தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். ஆகஸ்டு மாதத்தில் பிரான்சில் பல தொழிற்சாலைகள் மூடப்படுவதால் இவர்களில் சிலர் சொந்த நாட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தபோது இந்த விபத்து ஏற்பட்டது.

உலகில் இதுவரை நடந்த பெரிய விமான விபத்துக்களில் இது 2-வது ஆகும்.

1974மார்ச்3ம்தேதிபாரிஸ் விமான நிலையத்துக்கு வெளியே நொருக்கிய விமானத்துக்கு ஏற்பட்ட விபத்தே மிகப்பெரிய விபத்தாகும். இதில் 345பேர் கொல்லப்பட்டனர்.

1973-ல் நைஜீரியாவில் நடந்த ஹஜ் பயணிகள் விமான விபத்தில் 176 பேர் கொல்லப்பட்டனர்.

இப்போது நடந்த விபத்தில் 180 பேர் கொல்லப்பட்டதால் இதுவே இரண்டாவது பெரிய விபத்தாகும்.

# யாழ்ப்பாணம் மேயர் கொலை: தமிழ் புரட்சி கவிஞர் கைது

கொழும்பு, ஆக, 4—இலங்கையில் உள்ள தமிழ் புரட்சிக் கவிஞர் காசி ஆனந்தன் கைது செய்யப்பட்டுள்ளார்.

இவர் எதிர்க்கட்சி தமிழர் கூட்டணியின் அமைப்பாளர் ஆவார்.

கவிஞர் காசி ஆனந்தனை இலங்கை போலீசார் கைது செய்துள்ளனர்.

இலங்கை அரசின் ஆதரவாளராக இருந்த யாழ்ப்பாண நகரமேயர் ஆல்பிரெட் துரையப்பா கொலை செய்யப்பட்டதன் தொடர்பாக காசி ஆனந்தன் அவசரகால கட்டுப்பாடு சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டார்.

இலங்கை கிழக்கு மாநிலத்தில் உள்ள பட்டிகலா என்ற இடத்தில் அவரை போலீசார் கைதுசெய்து யாழ்ப்பாணம் நகருக்குக் கொண்டுவந்தனர்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கைது செய்யப்பட்ட இவர் சில மாதங்களுக்கு முன்புதான் விடுதலை செய்யப்பட்டார்.

ஆல்பிரெட் துரையப்பாவை சுட்டுக் கொன்ற மூன்றுபேர்களைப் பிடிக்க போலீசார் வீடுவீடாகச் சோதனைசெய்து வருகிறார்கள் ஆனால் இதுவரை எந்த தடயமும் போலீசாருக்குக் கிடைக்கவில்லை.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor-in-charge: G. Dhanaraj.

## லண்டனில் இந்திய நகைகள் கொள்ளை

லண்டன், ஆக. 4—லண்டன் விமான நிலையத்தில் உள்ள 'ஏர் இந்தியா' சரக்குக் கிடங்கிலிருந்து 3 முகமூடி திருடர்கள் ரூ. 35 ஆயிரம் மதிப்புள்ள நகைகளை கொள்ளையிட்டுச் சென்றனர்.

இவர்களைக் கண்டு பிடிக்கும் முயற்சியில் போலீசார் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

இந்த கிடங்கில் அபினி இருக்குமென்று கொள்ளையர் எதிர்பார்த்திருக்கலாமென்றும் வைத்தியத்திற்காக சில சமயம்பிரிட்டனுக்குவிமானத்தில் அபினி ஏற்றிச் செல்வது உண்டு என்றும் விமான கம்பெனி அதிகாரி ஒருவர் கூறினார்.

துப்பாக்கிகளுடன் வந்த முகமூடி மனிதர் கொள்ளையிட்டபோது சரக்கு கிடங்கில் மருந்துகள் எதுவுமில்லை என்றார்.

பாதுகாவலரை ஒரு அறையில் பூட்டிவிட்டு, கொள்ளையர் திரும்பிச் செல்கையில் சாவியை எறிந்துவிட்டுப் போய்விட்டனர். பூட்டிய அறையிலிருந்த காவலர்கள் உதவி கோரி சப்தமிடவே அங்கே வந்த ஊழியர் இவர்களை அறையிலிருந்து விடுவித்தனர்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஆக 4—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 553 00

(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 52 50

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1375 00

உள்ளூர் 1 60 00

(வெள்ளி 10 கிராம்) ரூ. 13 85

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி மொத்தவிலை 277 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 740 00

சில்லரை விலை ரூ. 7 80

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை ரூ. 400 00

சேலம்தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) ரூ. 70 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 130 00 முதல் 133 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 139 00

விற்பனை வரி தனி 141 00

சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 00

**கடலைப்பிண்ணாக்கு**

70கி.கி. கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 70 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 443 00 முதல் ரூ. 450 00

தென் ஆற்காடில்

# ரூ. 46,000 அரிசி கோதுமை பறிமுதல்

விழுப்புரம், ஆக. 4—கடந்த இரண்டு நாட்களில் தென்னாற்காடில் பல இடங்களில் ரெவின்யூ அதிகாரிகளும் போலீசாரும் சோதனை நடத்தி ரூ 10,000 மதிப்புள்ள கோதுமையையும் ரூ 36 000 மதிப்புள்ள நெல், அரிசியையும் கைப்பற்றியுள்ளனர்.

விழுப்புரம் அருகே வடக்கு திசையில் தக்க பெர்மிட் இல்லாமல் சென்றுகொண்டிருந்த ஒரு லாரியிலிருந்து சாலை கிராமத்தில் ரூ 10000 மதிப்புள்ள 56 மூட்டை கோதுமை பிடிபட்டது.

இது தொடர்பாக சென்னையைச் சேர்ந்த காதர் மொஹிதீன் என்ற வியாபாரி மீதும் டிரைவர் தட்சிணாமூர்த்தி கிளீனர் ராமு ஆகியோர் மீதும ஒரு வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

விழுப்புரம் ஜங்ஷனில் ஒரு ரெயிலிலிருந்து 52சிறிய அரிசி மூட்டைகள் கைப்பற்றப்பட்டன.

கடந்த 1ம் தேதி ஒரு அரிசி மில்லிலிருந்து30மூட்டை நெல்லையும் 15 குவிண்டால் அரிசியையும் அதிகாரிகள் கைப்பற்றினர். அப்துல் சமத்என்பவர் மீது ஒரு வழக்குப் பதிவுசெய்யப்பட்டது.

கண்ட மங்கலத்தில் ஒரு அரிசி மில் லிலிருந்து 5 மூட்டை நெல்கைப்பற்றப்பட்டது. பிடாகம் கிராமத்தில் ஐந்து இரட்டை மாட்டு வண்டிகளிலிருந்து 13மூட்டை நெல் கைப்பற்றப்பட்டது. திண்டிவனத்தில ஒரு அரிசி மில்லலிருந்து 69 மூட்டை நெல்லையும், 13 மூட்டை அரிசியையும் போலீசார்கைப்பற்றினர். திண்டிவனம அருகே ஒரு பஸ்ஸின் கூறையிலிருந்து 35 மூட்டை அரிசியையும் போலீசார் கைப்பற்றினர்.

ரூ. 3 லட்சம் தங்கக் கட்டிகள் சிக்கின

# சிறுகிராமத்தில் கறுப்பு பணக்காரர் வீட்டில் 24 மணி நேர சோதனை

அலகாபாத், ஆக. 4—உத்தரப் பிரதேச மாநிலத்தில் கோதிகார் என்னும் சிறு கிராமத்தில் ஒரு பணக்காரர் வீட்டில் அதிகாரிகள் சோதனையிட்டு கணக்கில் காட்டப்படாத தங்க வெள்ளிக் கட்டிகளையும் ரொக்கப் பணத்தையும் ஏராளமான பதுக்கல் தானியத்தையும் கைப்பற்றினர்.

இவற்றின் மதிப்பு சுமார் ரூ 6 லட்சமாகும்.

அக்கிராமத்தில் ஜகதீஷ் பிரசாத் ஜெயின் என்பவர் கணக்கில் காட்டப்படாத ரொக்கத்தையும், ஏராளமான தானியத்தையும் வைத்திருப்பதாக போலீசாருக்குத் தகவல் கிடைத்தது.

போலீசார் சென்று அவருடைய வீட்டை சோதனையிட்டனர் 24 மணி நேரம் சோதனை நடந்தது. அப்போது ரூ. 3 லட்சம் பெறுமான தங்கக் கட்டிகளும் ரூ 1 லட்சத்து 50 ஆயிரம் பெறுமான வெள்ளி நாணயங்களும், நகைகளும், மற்றும ரொக்கமும் சிக்கின. ரூ. 75 ஆயிரம் பெறுமானமுள்ள 380 குவிண்டால் உணவுத் தானியங்களும் கைப்பற்றப்பட்டன.

ஜகதீஷ்பிரசாத் ஜெயினும், அவருடைய சகோதரரும் இந்திய பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டனர்.

ஊழல் குற்றச்சாட்டுகளின் பேரில் டிஸ்மிஸ் செய்யப்பட்டனர். வேலைக்கு வராமல் இருந்ததற்காக, அந்த டாக்டர் டிஸ்மிஸ் செய்யப்பட்டார்.

பீகார் அரசின் 49 அதிகாரிகள் ''திறமையற்றவர்கள்'' எனனும் காரணத்தின் பேரில் உத்தியோகத்திலிருந்து கட்டாய ஓய்வு பெறும்படி ''நோட்டீஸ்'' கொடுக்கப்பட்டு உள்ளனர்.

கமிஷனர் அந்தஸ்து கொண்ட 3 ஐ ஏ. எஸ். அதிகாரிகள் போலீஸ் டெப்டி இன்ஸ்பெக்டர்ஜெனரல்ஒருவர் ஆகியோர் பற்றிய குற்றச்சாட்டு வழக்குகள், மத்திய பப்ளிக் சர்வீஸ கமிஷனிடம் எடுத்துரைக்கப்பட்டுள்ளன; மேலும் 8 அதிகாரிகள் பற்றிய விஷயங்கள் பரிசீலனை செய்யப்படுகின்றன.

## ரெயில் வாகின் கொள்ளை: 4 பேர் கைது

விசாகை, ஆக 4—ரெயில்வே சரக்கு வாகன்களில் நடந்த திருட்டுத் தொடர்பாக, விசாகப்பட்டினத்தில் 4 பேர் உள்நாட்டு பந்தோபஸ்து பராமரிப்பு (மிசா) சட்டத்தின்கீழ் கைது செய்யப்பட்டனர்.

இவர்களில் இருவர் சரக்கு ரெயில்களில் வழக்கமாகத் திருடுபவர்கள் என்றும், மற்ற இருவர் மேற்படி திருட்டுப் பொருட்களை வாங்கிக்கொள்பவர்கள் என்றும் போலீசார் கூறினர்.

## 16 ரெயில்வே ஊழியர் வேலைநீக்கம்

கல்கத்தா, ஆக. 4—தென் கிழக்கு ரெயில்வேயில் சென்ற வாரம் மேற்கொண்டு 16 ஊழியர்கள் லஞ்ச ஊழலில் ஈடுபட்டதாக, வேலையிலிருந்து நீக்கப்பட்டார்கள்.

6 டிக்கெட் பரிசோதகர்கள், ஒரு ரிசர்வேஷன் குமாஸ்தா, இரண்டு டிக்கெட் கலெக்டர்கள், இரண்டு சீனியர் குமாஸ்தாக்கள் ஒரு உதவி ஸ்டேஷன் மாஸ்டர், ஒரு கூட்ஸ் குமாஸ்தா ஆகியோர் நீக்கப்பட்டனர். பொது மக்களுக்கு நிலக்கரியை விற்றதாக ஒரு எஞ்சின் டிரைவர், பிரேக் வேனில் அனுமதியின்றி சாமான்களை ஏற்றிச்சென்றதாக ஒரு பிரேக்மேனும நீக்கப்பட்டனர்.

இவர்கள் தவிர கடமையை செய்யத்தவறியதாக ரெயில்வே பாதுகாப்புப் படையைச் சேர்ந்த 14 ஊழியர்கள் சஸ்பெண்டு செய்யப்பட்டனர்.

## பீகாரில் 3 உயர் அதிகாரிகள் டிஸ்மிஸ்

பாட்னா, ஆக 4—பீகார் மாநிலத்தில், அரசு எஞ்சினீயர்கள் இருவரும், சுகாதாரச் சாலை டாக்டர் ஒருவரும்

## கலப்பட வியாபாரிக்கு 6 மாத சிறை

வாரங்கல், ஆக. 4—நெய்யில் கலப்படம் செய்ததாக, ஆந்திராவில் வாரங்கல் நகரைச் சேர்ந்த ஒரு வியாபாரிக்கு 6 மாத கடுங்காவல் தண்டனையும், அத்துடன் ரூ. 1000 அபராதமும் விதிக்கப்பட்டது.

பாலில் கலப்படம் செய்ததாக காசிப்பேட்டையைச் சேர்ந்த ஒரு பால்காரருக்கு ரூ. 500 அபராதமும் விதிக்கப்பட்டது

## போலீஸ் அதிகாரி டிஸ்மிஸ்

ஹைதராபாத், ஆக. 4—ஆந்திராவில் மகபூப்நகர் மாவட்டத்தைச் சேர்ந்த மாரிக்கல் நகர போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் கணேஷ்ராவ் ஊழல் குற்றச்சாட்டு, ஒழுங்கீன நடத்தையின் பேரில், டிஸ்மிஸ் செய்யப்பட்டார்.

## இன்றைய சினிமா

சென்னை

ராம்: உறவு சொல்ல ஒருவன்

நியூ எல்பின்ஸ்டன் நீலப் பொன்மான்

மேற்கு மாம்பலம் நேஷனல்: பாசமலர்

ஈராஸ்: இருமலர்கள்

குரோம்பேட்டை

வெற்றி: பணம்பத்தும் செய்யும்

பல்லாவரம்

லட்சுமி: ஸ்ரீராமனும் நீயே கிருஷ்ணனும் நீயே

தாம்பரம்

எம். ஆர். தியேட்டர்: சவாலே சமாளி

நேஷனல் படிக்காத மேதை

சித்ரா: குடியிருந்த கோயில்

கொளத்தூர்

ஸ்ரீ குமரன் யாருக்கும் வெட்கமில்லை

திருக்கழுக்குன்றம்

புவனேஸ்வரி சிரித்து வாழ வேண்டும்

## போலீஸ் கமிஷனரிடம் ரிக்ஷா தொழிலாளர் கோரிக்கை

சென்னை, ஆக. 4—சென்னை மாநகர சைக்கிள் ரிக்ஷா தொழிலாளர் முன்னேற்ற சங்கப் பிரதிநிதிகள் சமீபத்தில் போலீஸ் கமிஷனரை சந்தித்து தங்களது குறைகளை தெரிவித்துக் கொண்டனர்.

ரிக்ஷா ஸ்டாண்டு இல்லாத இடங்களில் ஸ்டாண்டு அமைக்கும்படியும் ரிக்ஷா தொழிலாளருக்கு சீருடை கைபில்லையை மாற்றி பேட்ஜ் வழங்குமாறும் போலீஸ் கமிஷனரை அவர்கள் கேட்டுக் கொண்டனர்.

அந்தக் கோரிக்கைகளை போலீஸ கமிஷனர் ஏற்றுக் கொண்டது பற்றி சங்கத்தின் சார்பில் அதன் தலைவர் எல். துருவன் நன்றிதெரிவித்தார்.

ரிக்ஷா தொழிலாளர்கள். ஒழுங்குவிதிமுறைகளைகடைப்பிடிக்க வேண்டியதன் அவசியம் பற்றி போலீஸ் கமிஷனர் வற்புறுத்தினர்.

# $11\frac{1}{2}$ கோடி டன் தானிய உற்பத்தி: திட்ட கமிஷன் உறுப்பினர் நம்பிக்கை

திருச்சி, ஆக 4—நாட்டில் இந்த ஆண்டு 11 கோடி 40 லட்சம் டன் தானியம் உற்பத்தியாகும் என்று மத்திய திட்டக் கமிஷன் உறுப்பினர் பி. சிவராமன் நம்பிக்கை தெரிவித்தார்.

தானிய உற்பத்தி இந்த அளவுக்கு இருப்பதால், சேமிப்பை அதிகப்படுத்த மட்டுமே இறக்குமதி செய்யப்படும் என்றும் அவர் சொன்னார்

தமிழ்நாடு, குஜராத், ராஜஸ்தான், மகாராஷ்டிரம் ஒரிசா, ஆந்திரம் ஆகிய மாநிலங்களில்வறட்சி ஏற்பட்டிருந்தும், 11 கோடி 60லட்சம் டன் தானியம் இந்த ஆண்டு உற்பத்தியாகியிருப்பதாக அவர் தெரிவித்தார்.

திட்ட மிட்டுவவசாயமுறைகளை கடைபிடித்ததாலேயே இது சாத்தியமாயிற்று என்றும் சிவராமன் கூறினார்.

சமீபகாலம் வரை நாம் வெளிநாட்டிலிருந்து உர இறக்குமதி செய்துவந்தோம். இதனால், உர உற்பத்திக்காக பெரும் தொகையை திட்டக் கமிஷன் ஒதுக்கியது. திட்ட கால இறுதிக்குள் உர உற்பத்தியில் நாம் தன்னிறைவு அடைவோம் என்று நம்புவதாக அவர் தெரிவித்தார்

நிலத்தடி நீரை எடுப்பதற்காக, தமிழ்நாட்டுக்கு துரப்பண கருவிகள் தேவை என்று தமிழக வேளாண்மை அமைச்சர் ஆதித்தனார் கேட்டிருப்பதாகவும், போதுமான துரப்பணக் கருவிகள்இருப்பதாகவும் அது சம்பந்தமான திட்டம் தயாரித்து அனுப்பினால் பரிசீலிப்பதாகவும் மத்திய அரசு கூறியிருப்பதாக சிவராமன் தெரிவித்தார்.

## ரயில்வேயில் 5 ஆயிரம் பேருக்கு வேலை

புதுடில்லி, ஆக. 4—ரெயில்வேயில் புதிதாக 5 ஆயிரம் பேருக்கு வேலை அளிக்கப்படுகிறது.

இதற்காக தொழிற்பயிற்சி (அப்ரண்டிஸ்) அளிக்க 5 ஆயிரம் பேரைத்தேர்ந்தெடுக்கும் பணியை செப்டம்பர் மாதத்திற்குள் முடித்துவிடும்படி, வட்டார ரயில்வேக்களை மத்திய ரயில்வே மந்திரி கமலபதி திரிபாதி கேட்டுக்கொண்டுள்ளார். இவர்களுக்கு அக்டோபர் 1-ந் தேதி முதல் பயிற்சியைத் துவக்கி விட வேண்டும் என்றும் அவர் கூறியிருக்கிறார்.

பிரதம மந்திரி இந்திரா காந்தி அறிவித்த பொருளாதாரத் திட்டத்தின் ஒரு பகுதியாக இந்த ''அப்ரெண்டிஸ்'' திட்டம் மேற்கொள்ளப்படுகிறது. இதனால் ரயில்வேக்கு 1975-76 ல் ரூ 50 லட்சம் செலவு பிடிக்கும் என்று ரயில்வே பத்திரிகைக் குறிப்பொன்று கூறுகிறது.

# பட்டப் பரீட்சை: 50 வயது கிழவர்களும் எழுத அனுமதி

மைசூர், ஆக. 4—அடிப்படைக் கல்வித்தகுதி இல்லாவிட்டாலும் 50 வயதுபூர்த்தி அடைந்தவர்கள் கூட பட்டப் படிப்புக்கான பரீட்சைஎழுதலாம்.

இந்தப் புரட்சிகரமான முடிவை மைசூர் பல்கலைக் கழகம் எடுத்துள்ளது.

இந்திய வரலாற்றில் முதன் முதலாக இப்படிப்பட்ட தீர்மானத்தை மைசூர் பல்கலைக் கழகம் நிறைவேற்றி இருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

பட்டப்படிப்பு தேர்வுஎழுத அடிப்படைக் கல்வித் தகுதி இல்லாவிட்டாலும் 50 வயதுக்கு மேற்பட்டவர்கள் பல்கலைக் கழக உயர் பரீட்சையை இனி எழுதலாம்

மைசூர் பல்கலைக்கழக அகாடமிக் கவுன்சில் கூட்டத்தில் அதன் துணைவேந்தர் டி. வி அர்ஸ் இத்தீர்மானத்தைக் கொண்டு வந்தார். அது நிறைவேற்றப்பட்டது.